‘‘ஈழநாடு’’ பரிசுக் கதைகள்



ஐவர் எழுதிய

# சிறுகதைகள்

‘‘ஈழநாடு’’ வெளியீடு

# முன்னுரை

'ஈழநாடு' தனது பத்தாவது ஆண்டு நிறைவை யொட்டி நடாத்திய இலக்கியப் போட்டிகளின் விளைவாக, ஈழத்து இலக்கிய உலகிற்கு ஆக்க பூர்வமான சிருஷ்டிகள் கிடைத்தன என்பதைத் தமிழுலகம் அறியும். இலக்கியத்தின் பல்வேறுவடிவங்களிலும் 'ஈழநாடு' போட்டிநடாத்தியது. நாவல், சிறுகதை, காவியம், கவிதை, ஒரங்க நாடகம் எனும் பல்வகைத் துறைகளிலும் நாம் நடாத்திய போட்டிகளில் ஈழத்து எழுத்தாளர்கள் சகலரும் கலந்து சிறப்பித்தனர். அதனுல், இலக்கிய உலகிற்கு சிறந்த புதிய பல இலக்கிய மலர்கள் கிடைத்தன.

'ஈழநாடு' நடாத்திய போட்டிகளில் பெரு வெற்றியைத் தந்தது, சிறுகதைப் போட்டியேயாகும் நூற்றுக் கணக்கான எழுத்தாளர்கள் இச்சிறுகதைப்போட்டியில் கலந்துகொண்டனர். இச்சிறுகதைப் போட்டிக்கு நடுவர்களாக இருந்தவர்கள், சிறந்த பரிசுக்கதைகளைத் தெரிந்தெடுப்பதில் பலத்த சிரமத்துக்குள்ளாஞர்கள். ஏனெனில், ஐம்பதுக்கு மேற்பட்ட கதைகள் மிகச் சிறந்ததரத்தனவாய் இருந்தமையேயாகும். 'பரிசிலும் பாராட்டும் பெறும் முதல் பத்துக் கதைகள் ஈழத்துச் சிறுகதையுலகில் நிலைத்து வாழும் தரத்தின' என ஒரு முதுபெரும்விமர்சகர் குறிப்பிட்டுள்ளரர்.

பரிசிலைப் பெற்ற ஐந்து பரிசுக்கதைகளை நூலுரு வில் வெளியிடுவதில், 'ஈழநாடு' மகிழ்வடைகின்றது. இதனைத் தொடர்ந்து இரண்டாம் தொகுதியாக இன்னும் ஐந்து சிறுகதைகளை வெளியிடவுள்ளோம். முதல் தொகுதியிலுள்ள கதைகளை முறையே செங்கை ஆழியான், செம்பியன் செல்வன், அப்பச்சி மாகாலிங்கம்,

எம். ஏ. ரஹ்மான், மு. கனகராசன் ஆகியோர் எழுதியுள்ளனர். இவர்கள் யாவரையும் ஈழத்து இலக்கிய உலகு நன்கு அறியும்.

யாழ். இலக்கிய வட்டத்தின் தலைமைப் பீடத்தில் இவ்வாண்டு இருக்கும் 'செங்கை ஆழியான்' சிறுகதைத் துறையிலும் நாவல் துறையிலும் தனக்கென ஓரிடத்தைப் பெற்றிருப்பவர். 'ஈழநாடு' நடாத்திய நாவல் போட்டியில் முதற் பரிசு பெற்றவர்களில் இவரும் ஒருவர் என்பது குறிப்பிடத்தக்கது. சிறுகதை, நாடகம், விமர்சனம் ஆகிய துறைகளில் நன்கு காலூன்றி நிலைத்து நிற்பவர், செம்பியன் செல்வனாவார்; உணர்வுபூர்வமாகக் கதைகளை இவர் சிருஷ்டிப்பவர். மெல்லிய நகைச் சுவையோடு யதார்த்தபூர்வமாகக் கதைசொல்வதில் அப்பச்சி மகாலிங்கம் குறிப்பிடத்தக்கவர். உருவகக் கதைத்துறையிலும் சிறுகதைத் துறையிலும் எம். ஏ. ரஹ்மான் குறிப்பிடத்தக்கவர்; உத்திகளுக்கு இவர் முதலிடம் வழங்குபவர். குறுகியகாலத்தில் இலக்கிய உலகில் நிலையாகக் காலூன்றியவர் மு. கனகராசன் ஆவார். சிறுகதை, ஓரங்கநாடகம் எனும் துறைகளில் இவர் தனது திறமையை வெளிப்படுத்தியுள்ளார்.

இத்தகைய ஐவரது சிறந்த சிறுகதைகள் இத்தொகுதியில் இடம்பெற்றுள்ளன. இந்த ஐந்துகதைகளும் ஐவகையின; தனித்துவமானவை. சமூகத்தின் பலவேறு துறையினரை அறிவு பூர்வமாகவும் உணர்வு பூர்வமாகவும் எழுத்தாளனுக்கே உரிய கலையுணர்வோடு நோக்கி ஆக்கப்பட்டுள்ளன. இத்தொகுதியை வெளியிடுவதில் 'ஈழநாடு' பெருமகிழ்வடைகின்றது. இத்தொகுதி ஈழத்து இலக்கியஉலகிற்கும் வாசகப் பெருமக்களுக்கும் பூரண திருப்தியையும் மகிழ்வையும் அளிக்குமென நம்புகின்றோம்.

'ஈழநாடு.'

யாழ்ப்பாணம்,
7-1-71.

# பதிப்புரை

தமிழ் மக்களிடையே தேசியப் பற்றையும், உணர்வையும் ஊட்டும் ''ஈழநாடு'' தினப்பத்திரிகையின் பத்தாவது நிறைவு விழாவின் அறுவடையே இச்சிறு கதைத் தொகுதி.

அன்ருட நிகழ்ச்சிகளைத் திரட்டித்தரும் பெரும் பணிபுரியும் ''ஈழநாடு'' நமது நாட்டின் இலக்கியப்பேர் ஆர்வத்தை ஒருமுகப்படுத்தி வாசகர்களுக்கு நம்நாட்டு எழுத்தாளர்களின் படைப்பாற்றலை வெளிப்படுத்தவும் நமக்கென்ற பாரம்பரிய சிறப்பைப் புலப்படுத்தவும் இச் சிறுகதைத் தொகுதியாகிய 'கங்குமட்டை' என்ற நூல் ஒரு கருவியாக அமையும் என்பதில் ஐயமில்லை.

கங்குமட்டை, பூவும் கனியும், ஆறுதற் பரிசு, சிறுகை நீட்டி, சுண்டுவிரல்மெட்டி என்ற ஐந்து கதைகளும் ஈழத்தில் தனித்துவம் பெற்ற ஐந்து எழுத்தாளர்களின் படைப்பாகத் திகழ்கின்றன.

இக்கதைத் தொகுதியை நம்நாட்டு இலக்கியங்களைப் படிக்கவும், ஆதரவு தரவும் அவாவுற்று நிற்கின்ற வாசகர்கள் வரவேற்பார்கள் என்ற நம்பிக்கை நமக்குண்டு. இம்முயற்சி வெற்றிப் பாதையில் நம்மை இட்டுச் செல்லும் போது மேலும் புதிய ஆக்கங்களை நாம் முன்வைக்க வழிபிறக்கும் என்று கருதுகின்ருேம்.

பதிப்பாளர்.

''ஈழநாடு''
யாழ்ப்பாணம்.

# பொருளடக்கம்

J. வேதநாயகம்
திருநகர்

# கங்குமட்டை

(சிறுகதைத் தொகுதி)



['ஈழநாடு' 10-வது ஆண்டு நிறைவையொட்டி நடாத்திய சிறுகதைப் போட்டியில் பரிசில் பெற்ற சிறுகதைகள்.]

தொகுதி : 1.

'ஈழநாடு' வெளியீடு,

யாழ்ப்பாணம், — இலங்கை.

# கங்கு மட்டை



செங்கை ஆழியான்

# கங்கு மட்டை

சோளகக் காற்றின் வேகமான வீச்சால் பனைமரங்கள் சரசரத்து ஆடின. உடுக்கின் லயந்தப்பா ஒலிக்கு இணங்க, கலைகொண்டு தலைவிரித்தாடும் பெண்போலப் பனைமரங்கள் ஆடின பிடிப்பிழக்கத் தயாரான நிலையில் காய்ந்து செத்துக்கிடந்த காவோலைகள் இறுதிப் பற்றுதலோடு மரத்தோடும் தம்முடனும் மோதிச் சோளகக்காற்றின் வீரியத்தைப் புலப்படுத்தின. மெல்லிய மழைவேறு ஓயாது தூறிக்கொண்டிருந்தது.

இடையிடையே பனைஓலைகளும் கங்கு மட்டைகளும் சுழன்றடித்தபடி நிலத்தில் விழுகின்ற ஓசைகள் எழுந்து மடிந்தன.

சின்னச்சிக்கிழவர் கனத்த கம்பளி ஒன்றினால் நன்கு போர்த்தபடி வீட்டுத்திண்ணையில் வந்தமர்ந்து சோளகக்காற்றின் அமர்க்களத்தைப பார்த்துக்கொண்டிருந்தார். அவருடைய கைகள் நாட்டுப் புகையிலை ஒன்றைக் கிழித்து நரம்புநீக்கிச் சுருட்டுவதில் ஈடுபட்டிருந்தன. கண்கள் வெளியே எங்கோ அர்த்தத்துடனோ இன்றியோ நிலைத்துப் பார்த்தன.

இரண்டு நாட்களுக்கு முன்தான் அவர் படுக்கையில் கிடந்து எழும்பினார். பத்து நாட்களுக்குமேல் அறிவு நினைவற்றுப் படுக்கையில் கிடந்தார். அந்த வருத்தத்தால் தோன்றிய பலவீனம் முற்றாக நீங்கிவிடவில்லை. திண்ணையில் குந்தியிருக்கும்போது முதுகெலும்பு வலித்தது.

இது ஒரு மறுபிறப்புப்போல அவருக்கு இருந்தது. 'அவள் மட்டும் இல்லாதிருந்தால் இன்று நான்எங்கே' என்று அவர் கூறிக்கொண்டார்.

முதுமை குடிகொண்ட அவர் உடல் மெதுவாகநடுங்கியது. எனினும், கண்களின் தீட்சண்யம் மங்கிவிடவில்லை.

எல்லாப் புலன்களும் ஒன்றில் நிலைக்கவில்லை. அவரைப் பொறுத்தவரையில் அவை அப்படி நிலைக்கவேண்டிய அவசியமில்லை. எல்லாவற்றையும் ஒரே நேரத்தில் கிரகித்துக்கொள்ளக்கூடிய திறன் அவருக்கு இருந்தது.

சின்னச்சிக் கிழவர் ஏனோ சிரித்துக்கொண்டார்.

அவருடைய பெயர் பொன்னம்பலம்பிள்ளை- ஆனால் அந்தப்பெயர் அவருக்கு நிலைக்கவில்லை. மனைவியின் பெயரோடு ஒடு கிழவரையும் சேர்த்து ஊரார்சின்னச்சிக்கிழவர் என்று அழைத்தார்கள். அப்பெயரே நிரந்தரமாகிவிட்டது.

பொன்னம்பலம்பிள்ளை என்ற பெயரை அவருக்கு ஆசையோடுதான் ஆச்சி வைத்தாள். ஆனால் வீட்டில் அவளும் அப்புவும்அவரை 'பெரிய தம்பி' என்றே அழைத்தார்கள். திருநெல்வேலி என்ற தின்னவேலியிலேயே முதல்முதல் ஓட்டுவீடு கட்டியவர் பொன்னம்பலம்பிள்ளையின் தந்தையார்தான்.

ஆசையோடு ஆச்சி வைத்தபெயர் சிறுவயதில்கூட அவருக்கு நிலைக்காது போய்விட்டது.

கலியாணத்திற்குப் பிறகாவது அவருடைய பெயர் வழங்கியதா என்றால் அதுவுமில்லை. சின்னச்சி அம்மாளை அவர் தன் வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக்கொண்ட காலத் தொடக்கத்தில்கூட 'ஓட்டுவீட்டுத் தம்பி' பெரியதம்பி' என்ற பெயர்களே வழங்கின. மூன்று, குழந்தைகளுக்குத் தகப்பனாகிய பிறகு அவர் 'சின்னச்சிக்கிழவர்' என்ற கௌரவப் பட்டத்தைப் பெற்றார்.

அந்தப் பெயரே நிலைத்துவிட்டது. என்றாலும் பொன்னம்பலம்பிள்ளை என்ற பெயர் இடையிடையே வழங்கத்தான் செய்கிறது. கொழும்பிலிருந்து மூத்த மகன் சிவசுப்பிரமணியம் எப்போதாவது மணியோடர் அனுப்பும்போதோ,சிலாபத்திலிருந்து இளையமகள் பூரணி

எப்போதாவது கடிதம் எழுதும்போதோ முகவரியில் பொன்னம்பலம்பிள்ளை என்றே குறிக்கிறார்கள்.

தபால்காரர், சின்னாச்சிக்கிழவர்தான் பொன்னம் பலம்பிள்ளை என்று தெரியாது அலைந்து திரிவது வேறு கதை.

மூன்றாண்டுகளுக்கு ஒருதடவை வீடு வீடாக ஏறி இறங்கி வாக்குப்பிச்சை கேட்கிறவர்களும் 'பொன் னம்பலம்பிள்ளை' என்று அழைத்துக்கொண்டே வருகிறா ர்கள். பணம் கொடுத்து வாங்கிய காலத்திலும், பணம்கொடாமல் வாங்குகிற காலத்திலும் அரிசி பெற உதவும் கூப்பனிலும் 'க. பொன்னம்பலம்பிள்ளை' என்றே பெயர் இருக்கிறது.

மற்றையபடி அவர் சின்னாச்சிக்கிழவர்தான்.

அவருடைய பெயர் வழங்காமல் வேறு பெயர்களில் அவரை அழைப்பதற்குக் காரணம் இல்லாமலில்லை. பெற்றோருக்கு அடங்கியபிள்ளை, மனைவிக்கு அடங்கிய கணவன், பிள்ளைகளுக்கு அடங்கிய தந்தை என்பவை தான் அவர் வாழ்க்கைச்சுயசரிதையின் மூன்று பெரும் பாகங்கள்.

அவர் இயக்கப்படுபவர்; இயங்குபவர் அல்லர்.

அவர் பெற்றாருடன் இருக்கும்போது அவரை ஊரார், "தாய்தேப்பனுக்கு அடங்கிய பிள்ளை... ... தாய் தேப்பன்ரை சொல்லை மீறாது...' என்றார்கள்.

'உண்மைதான்' என்று சின்னாச்சிக்கிழவர் இப்போது தலையை ஆட்டிக்கொண்டார்.

சோளகக்காற்று வீசிக்கொண்டிருந்தது. மழையும் தூறிக்கொண்டிருந்தது. கொட்டிப் பொழிகின்ற மழையைக் கண்ணிமைக்காமல் பார்ப்பதிலும், நுரை பரப்பி விரைகின்ற வெள்ளத்தைப் பார்ப்பதிலும் அவ ருக்குமிகுந்த ஆசை. சிறு வயதில் வெள்ளத்திடையே நீர் எற்றியபடி விரைந்து ஓட அவருக்கு ஆசைதான். ஆனால், அந்த ஆசை நிறைவேற முடிவதில்லை.

தாழ்வாரத்தில் நின்று மழைத்தாரைகள் வெள்ளிக் கம்பிகளாக இறங்குவதைப்பார்த்துக்கொண்டு நிற்பார்.

"பெரியதம்பி...!" என்று அப்புவின் குரல் இடியாக முழங்கும். "உள்ளுக்கு வந்திரு..."

-மறுத்து நிற்க அவருக்குத்துணிவிருக்காது. சொல்வதும் சரிதான் என்றும் மனதிற்படும்.

ஒரு சம்பவத்துணுக்கு இன்றும் பசுமை மாருமல் அவர் நினைவில் இருக்கிறது.

நான்கு நாட்களாக மழை ஓயாதுபொழிந்ததால் வளவெல்லாம் வெள்ளம், முழங்காலளவிற்குத் தேங்கி நின்றது. அந்த வெள்ளத்தினூடே நடந்து திரியவேண்டும் என்ற ஆவல் அவருக்கு; ஆச்சியும் அப்புவும் தடையாக இருந்தனர்.

ஒரு நாள் பக்கத்து வீட்டுக் கிழவிக்கு வருத்தம் கடுமையென்று ஆச்சியும் அப்புவும் போய்விட்டார்கள். வீட்டில் அவரும் அவரது ஒரே தங்கை பாக்கியமுந்தான்.

-அவர் காலாற, மனமாற வெள்ளத்தினூடே நடந்து திரிந்தார். எவ்வளவு குளிர்மை? எவ்வளவு இனிமை? ஆச்சியும் அப்புவும் திரும்பி வந்தபோது பாக்கியம் உண்மையைக் கூறிவிட்டாள்; அவர் செய்யாத ஒன்றையும் கூட்டிக் கூறிவிட்டாள்.

''அப்பு... அண்ணை வெள்ளத்துக்குள் திரிந்தவர். வெள்ளத்துக்கை குளிச்சவர்...'

அப்பு எரிமலையெனக் குமுறிஞர்.

''டேய் பெரியதம்பி...!''

சர்வமும் ஒடுங்கிப்போய், பலிபீடத்திற்கு வரும் உயிராக, அப்புவிற்கு முன்வந்து நின்ருர். அப்புவின் கையில் அகப்பட்டது, இரட்டைமாட்டு வண்டித் துவரம் கம்புதான். 'பளார்' என்று ஒரு விளாசல். அவரின் முதுகுச் சதை பிளந்துகொண்டது.

அன்றைய அடியோடு அவர் எவ்வளவோ மாறிவிட்டார். பெற்ருர் கூறியவை அவருக்குத் தேவவாக்கு. தனக்கு என்று ஓர் உணர்வை அவர் ஏற்படுத்திக் கொள்ளவில்லை. சிலவேளைகளில் மறுத்துக் கூறமனந் துடித்தாலும், முதுகில் நிரந்தரமாகத் தங்கிவிட்ட பிரம்படி வடுவும், அவர்கள் சொல்வது சரிதான் என்ற உணர்வும் தடுத்தன.

அப்புவோடு தோட்டத்திற்குப் போவார்; சிலவேளை களில் தண்ணீர் இறைப்பார்; வரம்பு கட்டுவார். அதி லேயே அவர் சுவைகண்டார். அவரை ஒத்த பையன் கள் சினிமா, திருவிழா கூட்டம் என்றெல்லாம் திரிவ தைக் கண்டாலும், இவருக்கு அவற்றில் நாட்டம் ஏற் படவில்லை; ஏற்பட்டாலும் ஏதோ ஒருவித பயம் தடுத் தது.

அவரிலும் பார்க்க நான்கு வயது குறைந்த தங்கை பாக்கியம் கூட அவரை அடக்கி ஆண்டாள்.

"உனக்கு ஒன்றும் தெரியாது...... நீ சும்மா இரு அண்ணை...!" என்று அவள் உறுக்கினால் போதும், அவர் பேசாது அடங்கி விடுவார். அவருக்கும் எதுவும் தெரி யாததுபோலவே இருக்கும்.

அவர் கலியாணம் செய்துகொண்ட பிறகு அவரை ஊரார், "பெஞ்சாதிக்கு அடங்கிய மனிசன். அவள் கீறின கோட்டைத் தாண்டாது" என்று கூறிக்கொண் டார்கள்.

'உண்மைதான்.'

அவளுடைய பத்தொன்பதாம் வயதில் அவருக்கு கலியாணம் நடந்தது. கலியாணப் பேச்சுவார்த்தைகள் நடைபெற்றது என்னவோ அவருக்குத் தெரியும். 'பாக் கியத்திற்காக்கும்' என்று பேசாது இருந்து விட்டார். திருமணப்பேச்சு வார்த்தைகள் நடந்து முடிந்து நாள் வைத்தபின் தான் அப்பு அவரைக் கூப்பிட்டார்.

"பெரியதம்பி, உனக்கு வருகிற புதன்கிழமை கலி யாணம்..."

எங்கு, எப்படி என்ற விபரங்கள் அவருக்குத் தெரி யாது. யார் மணப்பெண் என்பதும் அவருக்குத்தெரி யாது. கேட்டு அறிவதற்கு விருப்பம் இருந்தது. ஆனால் முடியவில்லை.

அவருக்கு என்று ஒரு ஆசை, விருப்பம் இல்லையா?

பக்கத்துத் தோட்டத்தில் அதிகாலைவேளைகளில் தகப் பன் துலாமிதிக்க, நீரிறைக்கும் ஓர் இளம் பெண்ணை அவர் கண்டிருக்கிறார். அவளது அழகு அவரைக் கவர்ந் துதான் இருந்தது. அவளைத்தான் அவருக்கு மனைவியாக் கப்போகின்றார்களோ?

— அப்படியாயின் எவ்வளவு நன்ருக இருக்கும்?

ஆனல், அவருக்கு மனைவியாகவந்தவள் வேருெருத்தி சின்னுச்சி அம்மாள்.

சின்னுச்சியைப் பொறுத்தஅளவில் அவருக்கு நல்ல அபிப்பிராயம். அவள் மிகவும் கெட்டிக்காரி. குடும்பத்தை நிர்வகிப்பதில் அவளுக்கு இணை அவள்தான். அவருக்கு என்று ஒரு பொறுப்பையும் விடாது அவளே யாவற்றையும் நிர்வகித்தாள்.

''இந்த முறை புகையிலையை எனக்குத் தந்திடுங்கோ...'' என்று பட்டணத்திலிருந்து வந்த வியாபாரி கேட்பார்.

''அவவைக்கேளுங்கோ..'' என்பார் அவர்.

''உங்கடை மகனின் சாதகத்தைத் தாருங்கோவன் ஒரு பெண்பார்ப்பம்'' என்று வருவார் தரகர்.

''அவவைக்கேளுங்கோ...''

''ஒரு நூறு ரூபா இருந்தால் கடனகத் தாருங்கோ... மூன்று நாளிலை திருப்பித்தாறன்...'' என்று பக்கத்து வீட்டுக் கந்தப்பர் வருவார்.

''அவவைக்கேளுங்கோ..'' என்பார் அவர். காலகதியில் அப்படிக் கூறவும் வேண்டிய தேவை இல்லாமல் போய்விட்டது. எல்லோரும் அவரை எதுவுமே கேளாது சின்னுச்சியையே கேட்டார்கள்.

சின்னுச்சியும் அவரை ஒன்றுக்கும் கேட்பதில்லை.

அவருக்கு என்ன தெரியும் என்ற நினைவு. அவராகவே ஏதாவது செய்ய முயன்ருலும், ''நீங்க சும்மா இருங்கோ...நானே செய்யிறன்...'' என்பாள். —மறுத்துக்கூற அவருக்குத் துணிவிருக்காது. 'எனக்கு என்ன தெரியும்?' என்று எண்ணிப்பார்ப்பார்.

மழை ஓய்ந்து சற்று வானம் வெளுத்தது போல இருந்தது அவர் சுருட்டைச் சுவைத்துச் சுவைத்துப் புகைத்தார். முதுகுத்தண்டு வலியை தந்தது.

வளவு முழுவதும் பனை மட்டைகளும், கங்குமட்டைகளும், பன்னடைகளும் குவிந்து கிடந்தன. ஐந்நூறு பனைகளுக்குமேல் நின்ற காணி அது. இன்று இரண்டாகப் பிரிக்கப்பட்டுவிட்டது.

அவருடைய கண்பார்வை பதியக்கூடிய தூரத்தில் தான் காணியைப் பிரிக்கும் பனை மட்டையால் வரிந்த வேலி இருக்கிறது. ஆங்காங்கே மட்டைகள் உக்கி விலகியிருந்தன. தென்மேற்கு மூலையில் மழைக்கும் காற்றுக்கும் தாக்குக் கொடுக்க முடியாத வேலி உட்புறமாகச் சாய்ந்துகிடந்தது.

பாசத்தையும் பிரித்து வைத்திருப்பது அந்த வேலி தான்.

சின்னச்சிக்கிழவர் பெருமூச்சொன்றை வெளிப்படுத்தினர். காலம் எவ்வளவு மாற்றங்களை ஏற்படுத்தி விடுகின்றது? நேற்றுப்போல இருக்கிறது. இந்தப்பனை வளவு முழுவதும் அவரும் பாக்கியமும் ஓடித்திரிந்து கங்குமட்டைகள் பொறுக்கி அடுக்கியமை. இன்று ஓட முடிகிறதா?

வேலிக்கு அப்பால் யாரோ ஒரு கிழவி பனை மட்டைகளைப் பொறுக்கி அடுக்கிக் கொண்டிருப்பதை அவர் கண்டார். பாக்கியம் கூடக் கிழவியாகப் போய் விட்டாள். மெலிந்து, கறுத்துத் தள்ளாடிப் போனுள். ஒரு காலத்தில் 'அண்ணை, நீ சும்மா இரு' என்று தன்னை உறுக்கிய சிறுமி பாக்கியமா இவள்?

காலம் எவ்வளவு கொடுமைகளைச் செய்துவிட்டுக் கழிகிறது.

பாக்கியம் மட்டைகளைப் பொறுக்கி அடுக்குவதைக் காண அவருக்கு ஏக்கமாகஇருந்தது. 'இந்தக்காத்துக்கையும் மழையுக்கையும் உதுகளைப் பொறுக்க வேணுமே?'

பனைமரங்கள் காற்றில் சிலிர்த்தன.

காணி பிரிக்கும் போது பாக்கியத்தின் வளவில் நின்றிருந்த பனைகள் இப்போது இல்லை. அரைப்பங்கிற்கு மேல் தறிக்கப்பட்டு விட்டன. அவளுடைய பிள்ளைகள் வீடுகட்டுவதற்கெனத் தறித்துக் கொண்டு போன பனைகள் தாம் எத்தனை?

பாக்கியத்தின் வீட்டில் ஒவ்வொரு முறையும் பனை தறிக்கும்போது, சின்னச்சிக் கிழவருக்குத் தன்னையே தறிப்பது போல உணர்வு பிறக்கும். பனையின் மீது இறங்குகின்ற ஒவ்வொரு கோடரி வெட்டும் தன் மீது விழுவது போலத்துடிப்பார்.

அவருக்குப் பிடியாத ஒன்று உண்டென்றால், அது பனைகளைத் தறித்து வீழ்த்துவதுதான். பனையிலிருந்து கிடைக்கின்ற பயன்களைக் கொண்டே வாழ்க்கை நடாத்துகின்ற பலரை அவர் கண்டிருக்கிறார். கூப்பன் அரிசியும் அமெரிக்க மாவும் சீனியும் மனிதரின் வாழ்வைச் சோம்பேறியாக்கிவிட்டன. அவர்அறியத்தக்கதாக சுற்றாடலில் இருந்த பனங்காணிகள் யாவும் அழிக்கப்பட்டுவிட்டன. பாழ்வெளிகளாக அவை இன்று கரடு பற்றிக் கிடக்கின்றன.

பாக்கியம் இப்போதும் பனைமட்டைகளையேபொறுக்கிக் கொண்டிருந்தாள். 'விசர்பெட்டை' என்று தங்கையை அவர் மனம் ஏசுகிறது. நேரில்போய் ஏசுவதற்கு அவருக்குத் துணிவில்லை.

எப்படிப் பேசுவார்?

நாற்பது ஆண்டுகளுக்கு முன் அவரது அப்பு மரணப் படுக்கையில் கூறியவை மறந்துவிடக் கூடியவைதாமா?

"பெரியதம்பி... உவளாலை தான் நான் சாகப்போகிறேன். எனக்கு என்று மகளாகப் பிறந்தாளே? அவளாலை என்மானம்மரியாதை எல்லாம் நாசமாய்ப் போச்சுது... அவளை எப்படி எல்லாம் வளர்த்தன்... போகட்டும்.... எல்லாம் போகட்டும். ஆனா, உனக்கு ஒன்று, பெரியதம்பி! அவளோடு நீ இந்தப் பிறப்பிலை சகவாசம் வைக்கக் கூடாது ... பேசக்கூடாது."

-அப்புவின் வார்த்தைகளை அவர் மீறவே மாட்டார்.

அவரும் பாக்கியமும் பேசித்தான் எத்தனை ஆண்டுகள் ஆகின்றன? அவளுடைய பதினேழாவது வயதிற்குப் பின் அவளோடு அவர் பேசவில்லை. இல்லை... இல்லை... மூன்று தடவைகள் அவர் பேசியிருக்கிறார். நாற்பது ஆண்டுகளில் பாக்கியத்தோடு அவர் மூன்றே தடவைகள் பேசியிருக்கிறார்.

அந்த நாட்கள்—

வெளியே பலழயபடிகாற்றின் வேகம் தலைப்பட்டது. வானமும் அழத்தொடங்கியது. சின்னச்சிக் கிழவர் சுருட்டைவீசிஎறிந்துவிட்டு, உள்ளேபோய் அடுப்பைமூட்டினார். 'இந்தக் குளிருக்குச் சூடாக ஏதாவது குடித்தால் தான் நன்றாக இருக்கும்.'

தனக்குத்தானே சமைத்துச் சாப்பிடும்பொறுப்பை அவராகவே ஏற்றுக்கொண்டார். அவருடைய மூன்று பிள்ளைகளில் இரண்டாவது மகன் அகாலமாக இறந்து போனான். மற்றைய இருவரும் குழந்தையும் குட்டியுமாக நல்லாக இருக்கிறார்கள். அவர்கள் ஒவ்வொரு வரும் அவரைப் பலதடவைகள் வருந்தி அழைத்தார்கள். அவர் மறுத்துவிட்டார்.

தான் பிறந்து வளர்ந்த வீட்டையும் காணியையும் விட்டு அவர் போவதா?

அடுப்புப்பற்றி எரியும்போது சின்னச்சிக்கிழவருக்கு அந்த நாட்களே நினைவில் வந்தன. பாக்கியத்தோடு அவர் பேசிய மூன்று சந்தர்ப்பங்கள்—

சந்தைக்குப் போய்விட்டு அவர் திரும்பி வந்து கொண்டிருந்தார். உடலில் ஒரே அசதி. சந்தியில் திரும்பும்போதுதான் அவர்களை எதிரில் கண்டார்.

அவள் கனகசபையோடு நின்றிருந்தாள். அவனைப் பார்க்கவே அவருக்குப் பிடிக்கவில்லை. ஒன்றும் அறியாத ஒரு பெண்ணை ஏமாற்றிக் கூட்டிச்சென்றவன் அவன். கனகசபையிடம் என்னத்தைக்கண்டு இவள், தாய் தந்தை அண்ணன் வீடு வளவு எல்லாவற்றையும் துறந்து ஓடினாள்? முரடன் என்று ஊரில் பெயர்பெற்ற கனகசபையிடம் இவள் எதைக் கண்டாள். அவனிலும் பார்க்க எவ்வளவு உயர்ந்த ஒருவனை இவளுக்குக் கணவனாக்கி இருப்போம்.

''அண்ணை...!'' என்று அழைத்தாள், பாக்கியம். அவர் அவளை நிமிர்ந்து பார்த்தார். அவளின் விழிகள் கலங்கித் தவித்தன. அவர் எதுவும் பேசாது வெறுப்போடு ஒதுங்கிப்போக முயன்றார்.

''அண்ணை, நீயுமா என்னை வெறுக்கிறாய்?''

பாக்கியத்தின் இவ்வார்த்தைகள் அவரை நெகிழ வைத்தன. 'அவளோடு நீ இனி இந்தப் பிறப்பிலை பேசக்கூடாது' என்று அப்பு சத்தியம் செய்த வார்த்தைகளும் நினைவு வந்தன. மானத்திற்குப் பயந்துஇறந்து போன அப்புவின் மகன், மானத்தை விற்று ஓடியவளுடன் பேசுவதா?

அவர் அவளை ஏளனமாகப் பார்த்தார்:

''உன்னோடு எனக்கென்ன கதை...''

—அவர் வந்துவிட்டார்.

சூடாகத் தேநீர் கலக்கி எடுத்துக்கொண்டு வெளித் திண்ணைக்கு வந்தார். பாக்கியத்தைக் காணவில்லை. வீட்டிற்குள்போய்விட்டாள்போலும்.

அவளுடைய வீட்டைச் சுற்றி நின்ற பனைகள் வேக மாக அசைந்து ஆடின. சோளகம் பெயர்வதற்கு முன்பே ஓலைகளை வெட்டுவிக்கவேண்டும் பாக்கியம் இம் முறை ஓலைகளை வெட்டுவிக்காததால், தலைப்பாரத்தில் பனைகள் அசைந்துஆடின. சின்னுச்சிக்கிழவர் எப்போதோ ஓலைகளை வெட்டுவித்துவிட்டதால், கங்குமட்டைகள்கூட இப்போது காய்ந்துவிழத்தொடங்கியுள்ளன.

அவளுக்கு யார் இருக்கிறுர்கள்? உரிய காலத்தில் காரியங்களைச் செய்வதற்கு அவளுக்கு இன்று எவர் உள்ளனர்? கணவன் சிறையில் இருக்கிறுன். மூத்த மகனே போன இடந்தெரியாது. ஊமைப்பெண் ஒருத்தி கூட இருக்கிறுள். வேறு யார்?

'பளார்' என்ற சத்தத்தோடு திண்ணையில்வந்து ஏதோ விழுந்நது. கங்குமட்டை ஒன்று அவருக்குப் பக்கத்தில் விழுந்து கிடந்தது. நல்லவேளை, கொஞ்சம் தள்ளி விழுந்திருந்தால் சின்னுச்சிக் கிழவருக்கு மேலே தான்

'பத்துநாள் காய்ச்சலால் சாகாதவன்...இந்தமட்டை யாலையா சாகப்போறன்?'

கங்குமட்டையைத் தூக்கி எறியப்போனவர் சற் றுத் தயங்கினுர். அவர் கைகள் அம்மட்டையை ஏந்தி நிற்க, விழிகள் அதன்மேலேயே மொய்த்தன.

'கங்குமட்டை...'

கறுத்துக் காய்ந்து பொருக்குப்பட்டுக் கிடந்த அக் கங்குமட்டையில் அவர் என்னத்தைக் கண்டாரோ? பனை ஓலையின் அடிமட்டை அது. பாளைக்கத்தியின் கூரான வெட்டின் வாய் அதில் இருந்தது. நுனி ஒடு மட்டையாகப் பொருந்தி அடி இரு கிளைகளாகவிரிந்து இருந்த அக்கங்குமட்டை அவருசகு என்ன இரகசியங் களைக் கூறினவோ?

இத்தகைய கங்குமட்டைகளைத்தான் அவரும் பாக்கி யமும் முன்பு பொறுக்கினுர்கள். பாக்கியம் அப்போது சிறுமியாக இருந்தாள். உலகின் கள்ளம் புகாத வயது

சிலவேளைகளில் கங்குமட்டை ஒன்றைக் கையில் எடுத்துக் கூறுவான்:

''அண்ணை...இது நீயாம்...இது நானும்...'' அவளது சிறுவிரல் கங்குமட்டையின் இரு கிளைகளையும் ஒவ்வொன்றாகச் சுட்டிக்காட்டும். அப்போது அது அவருக்கு இன்று புரிந்ததுபோல விளங்கவில்லை. இப்போது நன்கு புரிகிறது. ஒரே அடியில் பிறந்த இரு கிளைகள்.

ஆனால் பாக்கியம் அவரது குடும்பத்திற்கு மாறாத வசையை ஏற்படுத்திவிட்டாள். ஆச்சி அப்புவின் மரணத்திற்கு அவளே காரணமாக அமைந்தாள். ஆச்சி, அப்புவின் மரணத்திற்கு மட்டுமா? அவருடைய இரண்டாவது மகன் சின்னத்துரையின்...

அச்சம்பவத்தை அவர் நினைத்துப் பார்க்கவே விரும்பவில்லை. ஆனால், நினைவுகள் அழியக்கூடியனவா? அதை எப்படி அவரால் மறக்கமுடியும்? பாக்கியத்தோடு அவர் பேசிய இரண்டாவது சந்தர்ப்பமும் அதுதானே?

பாக்கியம் வீட்டை விட்டு கனகசபையோடு ஓடி இருபத்திநான்கு ஆண்டுகள் கழிந்து போயின. அதற்குள் எத்தனையோ நிகழ்ந்துவிட்டன. அவரின் மனைவீ இறந்துபோனது, அவரின் பிள்ளைகளுக்குத் திருமணங்கள் நடந்தது.. எல்லாம் அக்காலத்துள்தான்.

பாக்கியம் கணவனோடு துணுக்காயில் இருப்பதாக எப்போதோ அவர் அறிந்திருந்தார். இரண்டு பிள்ளைகளும் இருப்பதாக எவரோ கூறியிருந்தார்கள்.

இருந்தாற்போல ஒருநாள் கனகசபை அவர் வீட்டிற்குள் வந்தான். வாசலில் பாக்கியமும் பிள்ளைகளும் நின்றிருந்தார்கள். அவர்கள் வந்தது ஒரு மாலைவேளையில்தான். நல்ல நினைவு இருக்கிறது.

கனகசபையை முதலில் அவரால் அடையாளம் காணமுடியவில்லை.

''நான்தான் கனகசபை...'' என்றான், அவன்.

''பாக்கியத்தின்...''

''ஓம்...''

''ஏன் வந்தாய்? உனக்கு இங்கு என்ன அலுவல்...?'' என்று அவர் கேட்டார்.

கனகசபை மௌனமாக நின்றான்; பின் கூறினான்: ''பாக்கியத்தின் பங்கைப் பிரித்துக் கொடு... இவ்வளவு காலமும் நீங்கள் அனுபவிச்சது போதும்...''

அவர் நிமிர்ந்து உட்கார்ந்தார்!

''எந்தப் பங்கு...?''

''காணி ...தோட்டம்''

அப்போதுதான் சின்னத்துரை வெளியே வந்தான். அவரது பிள்ளைகளில் அவன் சற்று முன்கோபமும் படபடப்பும் மிகுந்தவன்.

''என்னத்தைப் பிரிக்க வேணுமாம், அப்பு? உவர் ஆர்...'' என்று அவன் கேட்டான்.

அதன்பின் நடந்தவற்றை நினைக்க அவரது இதயம் கலங்கியது. வார்த்தைகள் படிப்படியாகத் தடித்தன; கனகசபையும் சின்னத்துரையும் வாக்குவாதப் பட்டுக் கொண்டார்கள்.

''இது எங்கடை சொத்து. உனக்கு என்னடா பங்கு? எளிய நாய்ப்பிறவிகள்...'' என்று ஏசினான் சின்னத்துரை: ''கனக்கக் கதைத்தாய் என்றால் உன்னைக் கழுத்திலைபிடித்து வெளியே தள்ளுவன்...''

''செய்யடா பார்ப்பம்...'' என்றான், கனகசபை.

''சின்னத்துரை... சின்னத்துரை...' என்று அவர் எவ்வளவு தடுத்தும் அவன் கேட்கவில்லை.

அவர் பயந்துபோய் நின்றார்.

கனகசபையைப் பிடித்து இழுத்துத் தள்ளிவிட்டான் சின்னத்துரை தள்ளின வேகத்தில் கனகசபை பனையோடு மோதி விழுந்தான். விழுந்தவன் கண்ணிமைக்கும் நேரத்துள், எழுந்து திண்ணையில் சாத்தியிருந்த கோடரியை எடுத்து...

சின்னாச்சிக்கிழவர் கண்களைத் துடைத்துக் கொண்டார். அதோ அந்த இடத்தில்தான் சின்னத்துரை தறித்துப்புரட்டிய பனைமரமாக விழுந்துகிடந்தான்.

பாக்கியமும் பிள்ளைகளும் ஓடிவந்து கனகசபையைப் பிடித்துக்கொண்டார்கள்.

"பாக்கியம் இது உனக்கே நல்லாயிருக்கா...?" — இவைதாம் அவர் பாக்கியத்தோடு பேசிய வார்த்தைகள்.

'கொலைகாரி...கொலைகாரி...' என்று இதயம் ஓல மிட்டது: 'பாவி'

வழக்கு நடந்தது. கனகசபை சிறை சென்றான். பாக்கியமும் வழக்காடித் தன் பங்கைப் பெற்றுக் கொண்டாள்.

கார் ஒன்று வாசலில் வந்து நின்ற சத்தம் கேட் டது. சின்னச்சிக்கிழவர் வாசலைப்பார்த்தார்.

'இந்தக் காத்துக்கையும் மழையுக்கையும் யார்தான் வருவினம்?'

"அப்பு...!" என்று அழைத்தபடி சிவசுப்பிரமணி யம் வந்தான்; அவனைத் தொடர்ந்து அவனது மனைவி யும் பிள்ளைகளும் வந்தனர். அவருடைய மகள் பூரணி யும் கூடவே வந்தாள்.

"பத்து நாட்களாகச் சுகமில்லாமல் கிடந்தாயாம், அப்பு! எங்களுக்கு அறிவிக்கப்படாதே...? இங்கை தனி யக் கிடந்து கஷ்டப்படவேணுமே?..." என்றாள், பூரணி.

"உனக்குச் சுகமில்லை என்று சோமப்பாவின் மகன் கொழும்பிலை சொன்னான்... உடனேவர வசதிப்பட வில்லை...நேற்றுத்தான் சிலாபத்துக்குப்போய் அப்படியே பூரணியையும் கூட்டிக்கொண்டு வந்தன் ... கடுமையான காய்ச்சலே, அப்பு! எங்கை மருந்து வாங்கினனீ...?" என்று பொரிந்து தள்ளினான், மகன்.

சின்னச்சிக்கிழவர் எல்லாரையும் பார்த்துச் சிரித் தார்.

வேலிக்கு அப்பால் பாக்கியம் கங்குமட்டை பொறுக் கிக் கொண்டிருந்தாள். அவள் மீது பூரணியின் பார்வை பட்டது.

"உவள் இன்னும் திரியிறாளே? பற நாய்கள்... தாங் களும் ஒரு மனிசரெண்டு சீலை உடுத்துக்கொண்டு திரி யினம்...உதிலை தானே சின்னண்ணையைச் சரிச்சவள்..." என்றாள், பூரணி. அவள் பேசியவை பாக்கியத்தின் காதுகளில் விழுந்திருக்காது. விழுந்திருந்தாலும் அவள் எதுவும் பேசாள்.

பாக்கியத்தின் வீட்டுப்பனைகள், அம்மன் கோவில் பூசாரியின் உடுக்குக்கு இணங்கத் தலைவிரித்தாடும் கலை வந்த பெண்போல, சிலிர்த்து ஆடின.

உள்ளே சமையல் நடந்துகொண்டிருந்தது. இன்று சமைக்கின்ற வேலை அவருக்கு இல்லை. அவர் திண்ணையிலேயே அமர்ந்திருந்தார்.

பாக்கியம் வேலியோரம் நின்று அவரைப் பார்ப்பது போல அவருக்குப்பட்டது.

அவள் மட்டும் இல்லாமலிருந்தால்...?

நாற்பது ஆண்டுகளில் பாக்கியத்தோடு மூன்றுவது தடவையாகப் பேசிய சந்தர்ப்பம் மனதில் கனத்தது. அவர் புகையிலையை எடுத்துச் சுருட்டத்தொடங்கினார்.

பதினைந்து நாட்களுக்குமுன் நடந்தது. அவருடைய தோட்டங்கள் இன்று குத்தகைக்கே செய்கைபண்ணப் படுகின்றன. இடையிடையே சென்று தோட்டங்களைப் பார்ப்பதில் அவருக்குத் தனி ஆவல். பதினைந்து நாட்களுக்குமுன் தோட்டங்களுக்குப் போய்விட்டு வரும்வழியில் மழை பிடித்துக்கொண்டது.

எல்லாம் வருவதற்குக் காலவேளை இருக்கிறது போலும்.

வீட்டிற்கு வந்து தலையைத் துடைத்தபோது, மெதுவாகத் தும்மல் கிளம்பியது. இரவு பத்துமணி அளவில் உடம்பெல்லாம் பற்றி எரிவதுபோல உணர்வு. உடலும் மெதுவாக நடுங்கத் தொடங்கியது. நாக்கு வேறு வறண்டு தாகத்தால் துடித்தது. சின்னச்சிக் கிழவர் எழுந்திருக்க முயன்றார்; முடியவில்லை.

நேரம் செல்லச்செல்ல நோயும் கடுமையாகியது. அவரை அறியாமலேயே அவருள் பயம் தலைதூக்கியது.

'ஒருவரும் பக்கத்தில் இல்லாமல் அனாதையாகச் சாகப்போகிறேன்...''

உடம்பிற்குள் ஏதேதோவெல்லாம் நடந்தன.

''ஐயோ...'' என்று கூச்சலிட முயன்றார். வார்த்தைகள் வெளிவர முடியவில்லை. அதற்குப் பிறகு நடந்தது அவருக்குத் தெரியாது.

அவருக்கு அறிவு வந்தபோது அவருக்குப் பக்கத்தில் பாக்கியம் அமர்ந்திருந்தாள். அவரால் அதை நம்பவே முடியவில்லை. பாக்கியம் எப்படி இங்கே வந்தாள்? நான் வருத்தமாகக் கிடப்பது அவளுக்கு எப்படித் தெரிந்தது?

''நீயா?'' என்றார். ''ஏன் வந்தாய்?''

''பத்து நாளாகிறது, அண்ணே!''

அவர் திடுக்கிட்டுப்போனார். பத்து நாட்களாக அவர் வருத்தத்தில் ஒன்றும் தெரியாமல் கிடந்திருக்கிறார். பாக்கியத்தை நன்றியோடு பார்த்தார், அவர். அவள் அவரைப் பாசத்தோடு பார்த்துவிட்டு வெளியேறினாள்.

அவள் போனதன்பின் வைத்தியர் சோமப்பா வந்தார்.

''நீர் பிழைச்சது பெரிய விஷயம்காணும். ஒருவரும் இல்லாமல் சாகக்கிடந்தீர் ...... பாக்கியம்எல்லோ உம்மைக் காப்பாற்றியது...''

அவர் சுகமாகி எழுந்ததன்பின் அவரைக் கண்டு போக அவரது பிள்ளைகள் வந்திருக்கிறார்கள். அவர் செத்துக்கிடந்தால் இன்றுவந்து அடக்கம் செய்துவிட்டுப் போவார்கள்.

அவர்களிலும் தவறில்லை.

கம்பளியால் இறுக்கிப் போர்த்துக்கொண்டு அத்திண்ணையில் அவர் உட்கார்ந்திருந்தார். மாலைதேய்ந்து இரவு படர்ந்துகொண்டிருந்தது. முன்னால் வெகுதூரத்தில் இருந்த வேலிக்கு அப்பால் பாக்கியத்தின் வீட்டினுள் எரியும் விளக்கின் ஒளி செத்தைக்கு ஊடாக 'மினுக் மினுக்' கென்று தெரிந்தது.

பாக்கியம் இப்போது படுத்திருப்பாள், மழைக்குள் நனைந்தாளோ? வருத்தம் ஏதாவது வந்திருக்குமோ? போய்ப் பார்த்தால் என்ன?

அப்புவின் வார்த்தைகள் நினைவுவந்தன; சின்னத்துரை இரத்தவெள்ளத்தில் கிடந்த காட்சி கண்முன் தெரிகிறது.

'கொலைகாரி' என்று உள்மனம் ஓலமிட்டது. ஒரு பெண் சரிவர நடக்காதுபோனால், அதனால் எத்தனை

அனர்த்தங்கள் விளைந்துபோகின்றன? பாக்கியம் எவருக்கும் பிடிக்காத, ஆனால் தனக்குப் பிடித்தமான ஒருகாரியத்தைத்தான் செய்தாள். அதனால் நிகழ்ந்தவை...?

''அப்பு, உள்ளுக்கு வாணை ...... காற்று நல்லா வீசுது ...'' என்று பூரணி கூப்பிட்டாள். அவர் நினைவு எங்கோ சஞ்சரித்துக்கொண்டிருந்தது.

''அவடுக்கு ஒருகோதாரியும் விளங்காது ... எழும்பி வாணை, அப்பு!'' என்று சிவசுப்பிரமணியம் உரக்கக் கத்தியது காதில் விழுந்தது. உள்ளே போக எழுந்தவரின் கண்கள் எங்கோ நிலைகுத்தி நின்றன.

இதென்ன, பாக்கியத்தின் வீட்டிற்கு அருகில் நின்றிருந்தபனை பேயாட்டம் ஆடுகிறதே? மற்றப் பனைகளிலும் இதன் ஆட்டம் சற்றுக்கூடுதலாக ... ... இதென்ன அது சரிவதுபோல ... சரிகிறது ... சரிகிறது ... ஐயோ பாக்கியம் ...

''ஐயோ...!'' என்று சின்னச்சிக்கிழவர் கத்தினார். அவரது கூச்சலைத்தொடர்ந்து 'படீர்' என்ற பெருஞ் சத்தத்துடன் பாக்கியத்தின் வீட்டின்மீது பனை மரம் சாய்ந்தது.

''ஐயோ ... அம்மா ... '' என்ற ஓலம் எழுந்து தேய்ந்தது.

பூரணியும் சிவசுப்பிரமணியமும் வெளியே ஓடிவந்தார்கள். சின்னச்சிக்கிழவர் பாக்கியத்தின் வீட்டைப பார்த்தபடி திக்பிரமை பிடித்து நின்றார்.

பூரணி நிலைமையைப் புரிந்துகொண்டாள்.

''உவளுக்கு இது நல்லா வேணும்... பனைமட்டுமே, இடியே விழும் ...''

சின்னச்சிக்கிழவர் மகளை வெறியோடு பார்த்தார். மறுகணம் பாக்கியத்தின் வீட்டை நோக்கி ஓடத் தொடங்கினார்.

''அப்பு, நில்...!'' என்று உறுமினான் சிவசுப்பிரமணியம்: ''எங்கே போறாய்...'' என்று ஓடிப்போய் அவர் கையைப்பற்றினான்; ''தம்பியை வெட்டிச் சரித்ததை மறந்துபோனாயே? உனக்கு ஒன்றும் தெரியாது ... நீ போகக்கூடாது ...''

'இவன் சொல்வதும் சரியோ ...?'

அவர் ஒருகணம் தயங்கி நின்றார்.

"அப்பு ... நீ போகக்கூடாது ..." என்று தடுத்தாள் பூரணி.

'இவள் சொல்வதும் சரியோ?'

அவர் ஒருகணம் பேசாது நின்றார்; பாக்கியம்வீட்டில் ஓலம் எழுந்தது. மறுகணம் எதோ ஓர் உணர்வு. கைகளை உதறிவிட்டுப் பாக்கியத்தின் வீடுநோக்கி ஓடத் தொடங்கினார்.

"நில்லணை, அப்பு ...நீ அங்கை போனால், நான் பொலிடோல் குடிச்சுச்சாவன்..." என்றாள் பூரணி.

"அப்பு ... நீ அங்கைபோனால் இனி உன்ரை முகத்திலை விழிக்கவும் மாட்டன் ... கொள்ளியும் வைக்கமாட்டன் ... என்றான், மகன்.

சின்னச்சிக்கிழவருக்கு அவை கேட்டன.

அவர் அவற்றை எல்லாம் உதறினார்.

தாய் தகப்பனுக்கு அடங்கிய பிள்ளை, மனைவிக்கு அடங்கிய கணவன், பிள்ளைகளுக்கு அடங்கிய தந்தை பொன்னம்பலம்பிள்ளை என்ற சின்னச்சிக் கிழவர் தன்னுணர்வோடு தங்கை வீட்டை நோக்கி ஓட்டமாய் ஓடிக்கொண்டிருந்தார்.

— கங்குமட்டைகள் விழுந்துகொண்டிருந்தன.

(முற்றும்)

# பூவும் கரையும்



'செம்பியன் செல்வன்'

# பூவும் கனியும்

மயிலுக் கிழவருக்கு ஆத்திரம் குமுறிக் குமுறிக் கொண்டு வடுகிறது. வீட்டு வளவில் நிறைந்திருக்கும் சந்தடிகளுக்கும் இன்பப் பரபரப்புகளுக்குமிடையில், அவரது ஆத்திரம் அர்த்தமற்றதாகவும் கேலிக்கிடமானதாகவும் விளங்கியபோதிலும் மனதில் எழும் அழலை அவரால் அடக்கமுடியவில்லை.

முற்றம் - வீட்டுத்தாழ்வாரம் ... கிணற்றடி ...அடுப்படி ... எங்கும் இனசனங்கள் குழந்தை குட்டிகளுமாகக் குவிந்திருக்கின்றனர் அவர்களின் பரபரப்பான மகிழ்ச்சிச் சந்தடிகளுக்குமிடையில் கைவேலைகள்... ஏதேதோ கருமங்கள் துரிதமாக நடந்தேறிக் கொண்டிருக்கின்றன மாமரத்தின் நிழலின்கீழ் ஒலிபெருக்கிக்காரன் இருந்துகொண்டு சமீபகாலத் திரைப்படப் பாடல்களை ஒலிபெருக்கிக் கொண்டிருக்கிறான். சிறுவர் கூட்டமொன்று அவனை மொய்த்துக்கொண்டு நிற்கிறது. அங்கு வேறு வேலையாக வரும் சில இளைஞர்கள் சிறுவர்களை அதட்டி விலகச்செய்துகொண்டு தாம் விரும்பும் பாடலை ஒலிபரப்புமாறு தூண்டிக்கொண்டு நிற்கிறார்கள். பாவாடை கட்டிய இளம் சிறுமிகளும், புதிதாகச் சேலை உடுக்கத் தொடங்கிய 'இளம் பெண்களும்' தாமும் அக் கூட்டத்தினிடையே கலந்துகொள்ள வேண்டுமென்ற தவிப்பினுள்ளும் தங்கள் மனதிற்கே பிடிபடாத வெட்கத்திற்கோ அன்றி பெரியவர்கள் ஏதும்சொல்வார்கள் என்ற பயத்திற்கோ ஆளாகி

உதட்டின் விளிம்புகளிலும், கன்னக் கதுப்புகளிலும் சிறு நகையைத் தேக்கியவாறு, மலர்ந்த முகத்துடன் அங்குமிங்குமாக அலைந்து திரிந்து தம்மைக் காட்டிக் கொள்வதில் ஒருவித ஆனந்தம் கொள்கின்றனர்.

கிழவருக்கு இதனால் ஒன்றும் ஆத்திரம் வரவில்லை மாருக இந்த இளவட்டங்களின் தடுமாற்ற ஆரவாரம் அவருக்கு மனதிற்கு இதயாகத்தான் படுகின்றது இந்தச் சுபகாரியத்திற்குக் காரணமான சம்பவத்தை நினைத்தபோது நெஞ்சத்திலே கோடை மலர்களாக உவகை பூத்துக்கொட்டுகிறது.

அவரது செல்லப்பேத்தி சாரதாவின் மகளுக்கு இன்று 'காதுகுத்தல்' நடக்கப்போகிறது.

'விஜிக்குட்டிக்கு... என்ர பூட்டிக்கு காது குத்தல்'

அவர் மனதில் பெருமிதம் பொங்கி வழிகிறது.

'எனக்கென்ன குறை... பூட்டியைக்கூடச் சாகமுந்திக் கண்ணால பாத்திட்டன்... நான் செத்தாலும் நெய்ப்பந்தம் பிடிக்க பேரன் பேத்திகள் பூட்டன் பூட்டிகளெல்லாம் 'இருக்கினம்...' —ஈழத்துக் குடியானவன் ஒருவன் மனதில் இயல்பாக எழும் பெருமிதம் மனதில் நிறைகிறது.

- ஆனால் இந்தப் புறக்கணிப்பு ... உதாசீனம்தான் அவரால் தாங்கமுடியவில்லை.

அந்த வளவிலேயே பிரதான வீட்டை விலத்தி, ஒதுக்குப்புறமாகத் தனக்குத்தானே அமைத்துக் கொண்ட சிறு ஓலை வீட்டின் தலைவாசலில் நின்று கண்களில் எரிவுதோன்றப் பார்த்துக் கொண்டிருக்கிறார். அவர் மனதில் மகிழ்ச்சியும் ஆத்திரமும் ஏதோ பிடிபடாத நிலையில் கலந்து குமைகின்றன.

வந்திருக்கும் விருந்தினருக்கு பழமும், பலகாரமுமாக சோடாவும் சிகரட்டுமாக உபசாரம் நடந்து கொண்டிருக்கிறது. அதனைப் பார்த்ததும் அவரின் ஆத்திரம் அதிகரிக்கின்றது 'ஹூம்!' என்ற உறுமலுடன் இடுப்பிலிருந்து நழுவி விழும் நாலுமுழ வேட்டியை இழுத்துக் கட்டிக்கொண்டு முன்னும் பின்னுமாக நடக்கின்றார்.

''வந்தவைக்கெல்லாம் பெரிசா உபசாரம் பண்ணுறுளவை. இங்க ஒரு கிழவன் விழுந்துகிடக்கிருனெண்டு கொஞ்சமாவது நினைச்சாளவையே... அவளவைக்கு அவையின்ர புதிய சொந்தக்காறர்தான் பெரிசாப் படுகுது. ஆனு... இந்த அவையின்ர கொண்டாட்டத்துக்கெல்லாம் இந்தக் கிழவன்தான் காரணம் எண்டு எப்பனுவது சிந்தனே!... அந்தக் கிழவன் நேரத்துக்குச் சாப்பிடாட்டி பசியால துடிச்சுப்போகும் எண்ட கரிசனை... கொஞ்சமாவது உதுகளுக்கு இருக்கா?... ஹூம் எல்லாம் நன்றி கெட்டதுகள்... மகள் எண்டால் என்ன பேத்தி எண்டால் என்ன? எல்லாம் ஒண்டாத்தான் இருக்குதுகள்..!''

'எட தன்ர வளவைத்தான் கிழவன் எங்களுக்குக் குடியிருக்க விட்டது மட்டுமல்லாமல், தானிருந்த வீட்டகூட எங்களுக்கு விட்டிட்டு, தனக்கொரு குடிசை போட்டுக்கொண்டு பிறத்தியா வாழுறதுகூட எங்கட சுகத்துக்காகத்தான எண்டு நினைச்சுப் பாக்கிருளவையே...?' - மனதின் கொதிப்பு எண்ண அலைகளை எழுப்புகின்றன.

தன்னை ஒருவரும் நன்ருகக் கௌரவிக்கவில்லை, கவனிக்கவில்லை என்ற எண்ணம் எப்படியோ கிழவன் மனதில் எழுந்துவிட்டது அதனுல் அவரின் உள்ளம் கொதித்துக்கொண்டிருக்கிறது.

கிழவர் உண்மையிலேயே மிகவும் நல்லவர். தன் குடும்பம் கொப்பும் கிளையுமாசச் செழித்து வளர்வதைக் கண்டு மனம் மகிழ்கின்றவர். இல்லாவிட்டால் தனது ஒரே ஒரு மகளான கமலத்தை ஏராளமான நிலபுலன்களைச் சீதனமாகக் கொடுத்து கலியாணம் செய்துவைக்க, கொடுத்த சொத்தையெல்லாம் சில ஆண்டுகளிலே கரைத்துவிட்டு, வெறுங்கையோடு மகளும், மருமகனும், பிள்ளைகளும் வந்து நின்றபோது அவர் உடுகியே விட்டார். முதலில் மருமகனின் செய்கைக்சாக ஆத்திரப்பட்டாலும், 'எல்லாம் எழுதினபடி தான் நடக்கும்' என்று விதியின்மேல் பழிபோட்டு விட்டு மகளுடன் வந்திருந்த பேரன் பேத்திகளைக் கண்டு மனங்கலங்கி அப்படியே அணைத்துக்கொண்டார். மூத்த பேத்தியான சாரதா—அவரது செல்லப் பேத்தியாகி விட்டாள். எப்போதும் அவள் அவருடனேயே இருப்பாள். அவருடனேயே கோயில் குளம் எல்லாம் திரிவாள்.

அவர் மனைவி பாக்கியம்கூடக் கேலி பண்ணுவாள். —'என்னடி சாரதா அப்புவை இப்படிக் காவல்செய்தா அவர் வேலைவெட்டியள் பாக்கப் போறதில்லையே?'

சாரதா வெடுக்கெனப் பதில் சொல்வாள் ''அப்பு வேலை வெட்டி பாக்கப் போகவேணும்.''

''அப்படியெண்டா எப்பிடிச் சாப்பிடுறது...உழைச் சாத்தான சாப்பிடலாம்...''

''ஏன் அப்புட்டத்தான் கனக்கக் காசிருக்கே... என்னப்பு காசு இருக்கல்ல உங்களிட்ட...'' — என்று அவரையே திருப்பிக் கேட்பாள்.

அவரை அப்படியே மகிழவைக்கும் அவள் மழலைகள். அவர் அப்படியே மெய்மறந்து போவார்.

அவளது மழலையிலும் குறும்பிலும் தன்னை மறந்திருந்த அவருக்கு சாரதா ஒட்டு மாங்கன்றாக மதமதவென்று வளர்ந்து, பருவப் பூரிப்புடன் விளங்குவது புரியவேயில்லை

சாரதா அருகிலுள்ள கல்லூரி ஒன்றுக்குப் போய் வரத்தொடங்கினாள். அப்படி அவள் போகவும் வரவும் அவளைப் பார்த்துப் பார்த்து மெய் மறந்துகொண்டிருந்தான் சிவராசா. அவன் தினசரி அவள்போகும்பாதையில், அக் குறிப்பிட்ட நேரத்தில் கச்சேரிக்குப் போகும் பஸ்ஸுக்காகக் காத்துக் கொண்டிருப்பான். அவளின் அழகைப் பார்த்துப் பார்த்து மெய்மறந்த அவனுக்கு அந்தக் குழந்தையுள்ளத்தின் பண்பாடான நடத்தையும், உலகை விகற்பமின்றிப் பார்க்கும் களங்கமற்ற பார்வையும் மெய்மறககச் செய்தன.

அவன் பெற்றோர்களே சாரதாவுக்கு மணம்பேசி வந்தபோது கிழவர் திடுக்கிட்டார்.

சாரதாவுககு மணமா? குழந்தைக்குத் திருமணமா?

—அவர் சாரதாவைப் பார்த்தபோதுதான் அவள் சிறுமியல்ல. பெண்மை முகிழ்த்து நிற்கும் சுடர்விளக்கு. ஒரு குடும்பத்திற்கு ஒளி தரவேண்டிய பெண் விளக்கு என்பது புரிந்தது.

கலியாணம் சீதன விசயத்தில் தடங்கியபோது சாரதா கண்கலங்கியதைக் கண்டார். அவரால் பொறுக்கமுடியவில்லை. 'தனக்குப்பின் தானிருக்கும் காணியை

அவளுக்கே எழுதிவைப்பதாக வாக்குக் கொடுத்து —கலியாணத்தை நடாத்திவைத்தார். அந்தச் சாரதாவின் மகளுக்குத்தான் இன்று 'காதுகுத்தல்' நடக்கிறது.

—அந்த விழாவில் அவரை ஒருவரும் சரியாகக் கவனிக்கவில்லை. அவருக்குப் பொருமல் இராதா?

பாக்கியம்—அவர் மனைவிஇறந்தபிரக்தியிலும், தானிருந்த கல்வீட்டை பெருகிவரும் மகளின் குடும்பம் ஆளக் கொடுத்துவிட்டுதனக்கொருகுடிசைஅமைத்துக்கொண்டு வாழ்வதற்குக் காரணம் அவர்கள் குடும்பத்துடன் வாழப் பிடிக்காததல்ல. குழந்தைகள் காலம் தெரியாமல் அழுவதும் பிடிவாதம் பிடிப்பதும் இப்போது அவருக்கு ஏனோ எரிச்சலை மூட்டின. பேரன்பேத்திகளின் தற்கால நடைமுறைக்கேற்ற நடை, உடை, பாவனைகளைக் காணும்போது அவருக்கு மனம் எரியும். அவர் தனித்து வாழ்ந்தாலும், அவருக்குத் தவையான உணவும், பிறதேவைகளும் நேரந் தவறாது மகளாலோ பேத்தியாலோ நிறைவு செய்யப்பட்டுவிடும். ஆனால்—

அவர் இரண்டு மாதங்களுக்கு முன்னால் பெரிய காய்ச்சலில் விழுந்து எழுந்ததின் பின்னர் அவருக்கு வழக்கமாக வரும் உணவுகளுக்குப் பதிலாக உப்பில்லாமல் ஒருவித சுவையுமற்ற உணவே வந்துகொண்டிருக்கின்றன. கேட்டால் அவர் வாய்தான் சரியில்லை என்று பதில் வருகிறது..

''என்ர நாச்சியார் சமைச்செல்லோ சாப்பிடோணும் ... அவளப்போல சமைக்க ஒரு பிறவியள் இப்ப இருக்கினமே... அவளிட்ட சாப்பிட்ட வாய் இப்ப இதுகளின்ர சாப்பாட்ட சாப்பிட வேண்டியிருக்கு. நாச்சியார் குணத்தால, அழகால என்னைக் கவந்ததைப்போல சாப்பாட்டாலயே என்னை அப்படியே மயக்கிட்டா... இப்ப உணவும் சரியில்ல... அதையும் நேரத்துக்கும் உண்ண 'முடியேல்ல...'— கிழவர் நிலைகொள்ளாமல் தவிக்கின்றார்.

'டக்!'— மேசைமேலிருந்த கடிகாரம் ஒலிக்கிறது. நிமிர்கிறார்.

—'ஒன்றரைமணி!'

நடந்து நடந்து கால்கள் ஓயவே, அங்கு போடப் பட்டிருந்த கட்டிலில் அமர்கிறார்.

—'கிறீச் கிறீச்!'— என்று கட்டில் ஓலமிட்டு, அசைந்து கொடுக்கிறது. அது அவருக்கு வேதனையா இருக்கிறது. அவரின் தளர்ச்சியை நினைவூட்டுகிறதோ? கட்டிலின், தலைமாட்டிலிருந்த ஸ்டூலை நகர்த்தி இழுத்து அதன்மேலிருந்த செம்பை எடுத்து, வாயில் ஊற்றித், தலைவாசலின்பக்கத்துத் தட்டியை ஒரு கையினுல் விலத்திக்கொண்டே துப்புகிருர்.

வயிற்றில் 'கடகட'வென்ற தவளைச் சத்தம் வெறுமையான வயிற்றில் தகரப் பேணியில் கற்களைப் போட்டுக் குலுக்குகின்ற பிரமையின் நோக்காடு.

'வயித்தில வாயுகூட குடிகொண்டுட்டுது. இவளவை என்னைக் கொஞ்சமாவது கவனிக்கிருளவையே... எல்லாம் அந்தப் புண்ணியவதி போனுள். அதோட எல்லாப் எனக்குப் போச்சு... இல்லாமலே பழைய மனிசர் சொல்லிவைச்சவை...' மனைவி யோட அறுசுவை போம்' எண்டு... என்ர நாக்கை நல்லா வளத்துப்போட்டு அவள் போயிட்டாள்... இவளவையோ காலமை தந்த இடியப்பத்தைவிட வேறொண்டையும் கண்ணில காட்டுருளவையில்ல' நினைவுகள் வயிற்றின் கடுகடுப்பில் சீறி எழுகின்றன.

'இவளவைக்கும் என்னவிட வந்திருக்கிறவைதான இவைக்குப் பெரிசாப் படுகினம்... இவைதான நாளைக்கு இவையை வந்து தாங்கப் போயினம் எல்லாத்துக்கும் இந்தக் கிழவனிட்ட வந்துதான் பல்லைக் காட்டணும்... எல்லாம் என்ரபிழை. நான் கொடுத்த இடம்... இனிப் பாக்கிறனே... நானும்' —என்ற சிந்தனையினூடே எழுந்த எரிச்சலைத் தணிக்க செம்புத் தண்ணீரை எடுத்து நான்கு 'முறடுகள்' விழுங்குகின்றுர். பசிநாக்கில் தண்ணீர் ஒருவித அருவருப்புச் சுவையைத் தருகின்றது. வயிற்றின் கடுகடுப்புக் கொஞ்சமும் தீரவில்லை.

மடியைத் தொட்டுப் பார்த்துப் பிரிக்கின்றுர். ஒரேயொரு சுருட்டு மடியிலிருந்து கையில் உருள்கின்றது. திருட்டுப் பார்வையுடன் அதனை எடுத்துக்கொண்டு சுற்றுமுற்றும் பார்க்கிறுர். அதனைக்கண்டால் மூத்த பேத்தி ஓடிவந்து பறித்துவிடுவாள்.

'உங்களைச் சுருட்டுப் பிடிக்கக் கூடாதெண்டெல்லே டாக்குத்தர் சொன்னவர்' என்று சண்டை பிடிப்பாள். கிழவருக்கு பேத்தி சாரதாவின் நினைவு வந்துவிடுகிறது.

'அவள் சரியா குணத்திலும், உருவத்திலும் என்ர நாச்சியார் பாக்கியத்தைப் போலத்தான் — அவளைப் பாத்துப் பாத்துத்தான் என்ர பாக்கியத்தின்ர மறைவை மறக்கிறன்... அவள் பேசேக்கை தலையைச் சாய்த்து சிரித்துப் பேசுறது அப்படியே பாக்கியத்தை உரிசு வைச்சிருக்கிறது ...அதாலதான எனக்கும் அவளில இந்தப் பற்று... இல்லாட்டி அவளுக்கு இந்தக் காணியை எழுதிக்கொடுக்கிறன் எண்டு சொல்லுவனே... அஃ அவளும்தான் இப்ப வரவர மாறிப்போயிட்டாளே... என்னைக் கொஞ்சமும் கவனிக்கிறதில்ல... முந்தியெண்டால்... என்னணை அப்பு வேணும் எண்டு கேட்டுக் கேட்டுச் செய்யிறவள்... இப்ப ...' — நெஞ்சத்திலிருந்து பெருமூச்சொன்று எழுகிறது. சுருட்டைப் பற்றவைக்கும் ஆவலில் சுருட்டை முகர்ந்து முனையைக் கிள்ளி வைத்துத் தும்பைக் கடித்துத் துப்பிவிட்டு, வாயில் வைத்துக்கொண்டு நெருப்புப் பெட்டியைத் தேடுகின்றார்

'எங்க வைச்சன்?... வரவர ஒண்டும் வைக்கிற இடமே தெரியுதில்ல... மறதி கூடிப்போச்சு... இந்த மறதியாலதான இப்ப ஒருத்தரும் வீட்டில மதிக்கிறேல்ல. ஓம்... ஓம்... நான் விட்ட இடம்தான். நான் எல்லாரையும் வீட்ட விட்டு எழும்பச் சொன்னு எழும்ப வேண்டியவைதான...' என்ற ஒரு வக்கிரமான எண்ணம் மனதிலே எழுகின்றது.

'அவையளுக்குக் கொஞ்சமும் தங்கட நிலை தெரியுதில்ல... நான் நினைச்சனெண்டா இந்தக் காணியைக் கோயிலுக்கு எழுதிவைச்சுட்டுப் போயிடுவன்... என்ர காணியில இருந்துகொண்டு அவையின்ர நடப்பைப் பார். பாரனங்க... நல்லா நடக்குது உபசாரம்... இங்க ஒரு மனுசன் இருக்கிறுன் எண்ட சிந்தனை எப்பனும் இருக்கா அதுகளுக்கு. ஆ... கட்டிலுக்காலோடு நெருப் பெட்டி கிடக்க... நான் இங்க கிடந்து தடவுறன்...'.

—அதனைத் தடவி எடுக்கின்றார். எடுக்கும்போதே சந்தேகம் நடுக்கங்கண்ட, இரத்தத்தின் ஈரமே வற்றிய விரல்கள் பதட்டத்துடன் நெருப்புப்பெட்டியைத் தள்ளிப்பார்க்கின்றன.

பெட்டி காலி.

முகத்திலே ஏமாற்றம் புகையாய்க் கவிகின்றது. ஆத்திரம் அனலாகப் பற்றுகிறது.

மகள் கமலம் யாரையோ வலிந்து உபசரித்துக் கொண்டிருப்பது கண்ணில் பதிகிறது.

'என்ர நாச்சியார் இருந்தா... என்னை இப்படிப் பரிதவிக்க விடுவாளே. இதுக்கிடையில பத்துத்தரம் வந்து என்ன? ஏது எண்டு விசாரித்துக் கவனித்திருப் பாள். எனக்கு என்ன தேவையெண்டு குறிப்பாலயே உணர்ந்து செய்வாள்... அவள் என்ன இப்பத்த பெண் டுகளைப் போலவே... தவிச்சவாய்க்குத் தண்ணி கொடுக் கத் தெரியாம ஏன் சாப்பிடுற இடத்தில தண்ணி வைக்க மறக்கிறவைபோலயே... எங்ரை ராசாத்தி இருக் கேக்க நான் எப்பவும் பசியோட இருந்திருக்கிறனு? இல்ல...அவள்தான் இருக்க விட்டிருப்பாளா? நான் ஏதும் கோபத்தில சாப்பிடாம இருந்திட்டா ... இல்லா ட்டி சாப்பாடு வேணும் எண்டிட்டா அவளும் சாப்பி டாமப் பட்டினி கிடந்து என்னைச் சாப்பிடவைச்சிருப் பாள்... என்ர திமிரில எவ்வளவு கஷ்டத்தை அவளுக் குக் குடுத்திருப்பன். குழம்புக்கு உப்புக் கூடிட்டா அதுக்கு ஏடி... சொதி புளிகூடிட்டா அதுக்கு ஏச்சு... எண்டு எத்தனை சித்திரவதை செய்திருப்பன்.. ஆனு லும் ராசாத்தியின்ரை சமையல் சமையல்தான்... அதைத் திண்டவாய்க்கு இன்னெரு சமையலைத் தின்ன முடியுமே... என்னமோ என்ர கெட்டகாலம் இதுக ளிட்ட சோத்துக்குக் கையேந்தி நிற்கவேண்டியிருக்கு

'அவ மஞ்சள் குங்குமத்தோட போயிட்டா. நான் தான் இங்க நரகத்தில கிடந்து அழுந்திறன். அவளில் லாத உலகம் எனக்கு நரகம்தான... அந்தப் புண்ணிய வதி போகேக்கையும் என்ர கவலையோடதான போனவ. சாகிற வேளையிலும் மகளை அழைச்சி என்ன சொன் னவ...'

'பிள்ளை நான் போனப்புறகு நீதான் அப்புவைப் பாத்துககொள்ளோணும்— உனக்குத்தான் அவற்ற குணம் தெரியுமே... கோபம்தான் 'சுடுபுடுவெண்டு வருமேதவிர வேறொண்டும் தெரியாது... அவரையும் உன்ர புள்ளயளில ஒண்டாப் பாத்துககொள்... நேர காலத்துக்குச் சாப்பாட்ட கொடுத்திடு... இல்லாட்டி பசியால துடிச்சிடுவார்.. நானும் அவற்றை நாக்கை வேறு நல்லா வளர்த்துப் போட்டன்... நீ அவரை நல்லாக கவனிச்சுக்கொள்...'

'என்ர ராசாத்தி என்னைப் புருசனைப் போலயே பார்த்தவள்... தாயைப்போல... புள்ளையப்போல எல்ல பார்த்தவள்... அவளின்ர குணத்துக்கும், அழகுக்கும் இப்ப பொம்பிளையள் இருக்கினமே... என்ர மகளும் பேத்தியும் அப்படி இருப்பினம் எண்டுதான் நினைச் சன்... அவையளும் இப்ப காலத்துக்கேற்ற கோலமா நடக்கினம்... எண்டாலும் சாரதா சரியா அவள் மாதிரித்தான்... அவளப் பாக்கேக்கை எனக்கென்னமோ மனசுக்கு ஆறுதலாகத்தான் இருக்கு...'

—ஒலிபெருக்கி திடீரென பலத்த குரலில் பாடவும் அவர் சிந்தனை தடைப்பட்டது. அவரால் பொறுக்க முடியவில்லை.

—மேசை 'லாச்சி'யைத் திறந்து கொஞ்சம் காசை எடுத்து முடிந்துகொண்டு, அதனைத் தள்ளிப்பூட்டுகின்றார். அவர்கள் கவனிக்காவண்ணம் ஏதோ வேலிப்பக்கம் காரியமாகப் போகிறவர்போல் போய்த் திடீரென்று வாசற்கதவைத் திறந்துகொண்டு தெருவில் இறங்கிவிடுகிறார். 'யாராவது பார்க்கிறார்களா...?பார்த்து விட்டார்களா?' என்று சந்தேகத்துடன் திரும்பிப்பார்க்கிறார். நல்ல வேளை ஒருவரும் கவனிக்கவில்லை. வேகமாக நடக்கத்தொடங்குகிறார்.

நீண்ட நாட்களின்பின் நடப்பது சிரமமாக இருக்கின்றது. வெயிலின் வேகம் இன்னும் தணியவில்லை. வேகமாக நடக்கத்தொடங்குகிறார்.

சந்திக்கடை வேலாயுதம் 'தேத்தண்ணிக்கடை'யில் கூட்டம் இல்லை. இரண்டொருவர் அங்கிருந்த வாங்குகளில் இருந்துகொண்டு தேநீர் அருந்துகிறார்கள். 'பொயிலர்' முன்னால் தேநீர் ஆற்றிக்கொண்டிருப்பவன் அவரைக் கண்டதும் பணிவுடன், 'என்ன அப்பு வீட்டில விசேஷம்?'-என்று விசாரிக்கிறான்.

'பூட்டிக்குக் காதுகுத்தல் அதுதான்...'

''யார்...உங்கட பேத்தியின்ர மகளுக்கோ...?''

'ஓம்...ஓம்'—

'அங்க காதுகுத்து நடக்கப்போகுது... நீங்க இங்க வந்து நிக்கிறியளே...என்ன சங்கதி...?'

''பேத்தி எண்டா என்ன, பூட்டி எண்டா என்ன?'' என்று அலுத்துக்கொள்கின்ருர் ''என்ன அப்பு சொல்லுறியள்'' என்றுவேலாயுதம்அவர் வாயைக் கிண்ட''சே இவனிடம்போய்வீட்டுச்சங்கதியையெல்லாம் சொல்லுறதே? நாளைக்குஇவன் ஊரெல்லாம்சொல்லித்திரியவே...' என்ற எண்ணம் ஏற்பட, 'சும்மா ஒரு பேச்சுக்குச்சொல்ல நீ அதைப்பெரிசாகக்கேக்கவந்துவிட்டாய்...' என்றுசிரித்துச் சமாளிக்கின்ருர்.

''அதுசரி,அப்பு வெயிலுக்க எங்க கிளம்பினியள்...?''

'எட இவன் விடமாட்டான்போல'-என்ற எண்ணம் ஏற்பட, 'ஒன்றுமில்ல... சும்மா காலாற நடந்துவந்தனான்... அப்ப வரட்டே எனக்கொரு வேலை இருக்கு'- என்று நடக்கின்ருர்

'நல்லவேளை இவனிட்ட ஏதாகிலும்வாங்கித்தின்ன... அவன் என்ர வாயைக் கிண்டி...ஏதும் எடுத்திடுவான்...'

வழியில் பியசேனவின் பேக்கரி அலங்காரமாகக் காட்சியளிக்கிறது.

'இப்ப சிங்களாக்கள் கனபேர் யாழ்ப்பாணத்தில கடைபோட வந்திட்டினம்...முந்திக்கொஞ்சாக்கள்தான் இருந்தவை...இந்தக் கடையில நாலு விசுக்கோத்து வாங்கின ஒருத்தனுக்கும் ஒண்டும் தெரியாது...' -பேக்கரிக்குள் நுழைகின்ருர்.

உள்ளே, கண்ணுடிப்பெட்டிக்குள் எத்தனையோ விதம் விதமான கேக்குகள், அல்வாத்துண்டுகள்... அழகான இனிப்புச்சோடிப்புடன் விளங்குகின்றன. அவர் நாவில் நீரூறுகின்றது.

'எவ்வளவுகாலமாச்சு இதெல்லாம் திண்டு!'

''அவளவை ஒரு இனிப்புப் பலகாரமாவது கண்ணில காட்டுருளவையளா?''-என்று மகள்மீதும், பேத்தி மீதும் மனதிற்குள் வன்மம் வளர்த்துக்கொண்டார்.

''அவளவை தராட்டிஎன்னலவாங்கமுடியாதோ...''

''ஒரு ருத்தல் கேக் தா!'' என்று கம்பீரமாகக் கேட்கிருர். அவன் அழகான வளவளப்பான காகிதத்தில் கட்டிக்கொடுக்கிருன்.

''அவளவைக்கு இதையொண்டும் காட்டக்கூடாது. இரகசியமாகக் கொண்டுபோய் வீட்டுக்க ஒழிச்சு வைச்

சிடவேணும்... அதுகளுக்குத்தெரிஞ்சுதோ அவ்வளவு தான்...''- என்று நடைபோடுகிறார். அருகில் ஒரு கார் ஒன்று உரசியபடி வந்து நிற்கிறது பதறி அடித்துக் கொண்டு வேலி ஓரமாகப் பாய்ந்து, அங்கிருந்துபார்த்த போது—

'அட புரக்கிராசி விசுவலிங்கம்...'

''என்ன மயிலர்...எங்க இங்காலப்பக்கம்...?''- விசுவலிங்கம் கேட்டார். இருவருக்கும் இளமையிலேயே நல்ல பழக்கம் உண்டு.

''வேறெங்க வீட்டுக்குத்தான்...?'' - என்று கசப்புடன் கூறுகிறார்.

''என்ன ஒரு மாதிரிச் சொல்லுறீர்.. வீட்டில சச்சரவா?''

''சச்சரவு என்ன சச்சரவு... அதுகள் என்னைக் கவனிச்சாத்தானே?'' — விசுவலிங்கம் தனக்குள் சிரித்துக் கொள்கிறார். அவர் இதுபோல் எத்தனை விசித்திர உள்ளங்களைக் கண்டவர்.

''என்ன உண்மையாவா சொல்லுறீர்? நான் நம்ப மாட்டன்... சாரதாவையும், கமலத்தையும் எனக்கு நல்லாத் தெரியுமே... காரில ஏறும்... நானும் அந்த வழியாலதான் போறன்...உம்மை வீட்டில இறக்கிவிடுறன்...'' - அவர் ஆவலுடன் ஏறி அமர்கிறார் கார் புறப்படுகிறது

-அவர் தனது மன அரிப்பை எல்லாம் கொட்டுகின்றார்.

''அப்படியா?''- என்று வியப்புடன் விசுவலிங்கம் கேட்கவும், அவர் தன் எண்ணத்தை வெளியிடுகிறார். அவர் திடுக்கிடுவதை முகம் காட்டுகிறது.

''என்ன நீர் சொல்லுறது உண்மையா? என்ன விசர்க்கதை பேசுறீர்?

''இதொண்டும் விசர்க்கதையில்லை... உண்மைதான்... நான் ஏன் அவளவைக்குக் காணியைக் கொடுப்பான். கோயில் குளத்துக்கு எழுதிவைச்சாலும் போறவழிக்குப் புண்ணியமுண்டு...''- அவர் உறுதியாப் பேசுறார்.

''மயிலர் உமக்கேதோ ஆத்திரம்போலக் கிடக்கு... இப்ப இதைப்பற்றி எல்லாம் கதைக்கவேண்டாம். ஆறு

தலாக யோசிப்பம். அவசியமெண்டா நான் உமக்கு உதவிசெய்வன்... இதோ வீடுகூட வந்திட்டுது உம்மை இறக்கிவிடுறன்.. பேசாம வீட்டபோம்!

கார் நிற்கிறது. கிழவர் இறங்குகின்றார்.

புறக்கிராசியாருக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டு, மெல்ல வாசற் கதவைத்திறந்துகொண்டு உள்ளே நுழைந்தபோது–

அவிழ்த்துவிடப்பட்ட ஆட்டுக்குட்டி, மல்லிகைப் பந்த ன் கீழ் நின்று மல்லிகைக்கொடியை இழுத்திழுத் துக் கடித்து மேய்ந்துகொண்டிருக்கிறது.

வழக்கமாக அந்தக் காட்சியைக் கண்டால், கிழ வருக்கு இரத்தம் தலைக்கேறி மனம் அசுரகுணம் கொள் ளும். வீட்டிலுள்ளவர்கள் அனைவரையும் திட்டித்தீர்த்து விடுவார். ஆட்டுக்குட்டிக்கு 'சனியன் நாசமாப்போக!'- என்று கல்லால் விட்டெறிவார். ஆனால் இன்றோ?- கடை வாயின் இரத்தத்தை நாவால் சுவைபார்க்கும் ஆட் கொல்லியின் வக்கிரகுணம் மனதை மேவி நிறைக்க, மல்லிகைக் கொடியின் அழிவின் சிதைவில் மனதின் கொதிப்பு தண்மை கொள்வது போன்ற சுகமாக இருக் கின்றது.

'...நீ நல்லாத்தின்...இவங்களுக்கேன் மல்லிகையும் பந்தலும்... இதுகளையெல்லாம் வைத்துப் பராமரித்து என்ன சுகத்தைக் கண்டன்... ஏதோ அவளவைதான் உதுகளை அனுபவிக்கிறாளவை ... அவளவைக்கு நல்லா வேணும்... நீ நல்லாத்தின்... உனக்கும் பசியாத்தான் இருக்கும்... என்னையே கவனிக்காதவளவை உன்னை எங்க கவனிக்கப்போறாளவை. வழக்கமா உனக்குக் கிடைக்கிற கஞ்சித்தண்ணியைக்கூட உனக்கு வைச்சி ருக்கமாட்டாளவை... எனக்குத் தெரியும்... வாயில்லாச் சீவன்... நீ என்ன செய்வாய்?... நல்லாத்தின்!'- என்று மனதின் கொதிப்பை வெளியிட்டவாறு தனது குடி சையை நோக்கிச் செல்கின்றார். தனது பார்சலை யாரா வது பார்த்திடுவார்களோ என்ற அச்சம் வேறு.

''இங்க வந்திட்டாரே அப்பு!... எங்கண அப்பு அதுக் குள்ள போனனீ!... அதுவும் இந்த வெயிலுக்க ..,வாவா ... உனக்காக எல்லாடும் காத்துக்கொண்டு இருக்கினம்.. அவர்கூட எங்க உன்னைக்காணேல்ல எண்டு தேடப் போட்டார்!'' என்று மூத்த பேத்தி ஓடிவருகின்றாள்.

—அவர் ஒன்றும் புரியாமல் விழிக்கின்றார்.

ச. இராமு — சாமுவேல்

''என்னணை அப்பு முளிக்கிறு... பசி மயக்கமே... இண்டைக்கு இதால கொஞ்சம் நேரம் போச்சுது... எங்க நீ போகப்போறியோண்டு அம்மா பதைச்சுப் பதைச்சு வேலைபாத்தும் நேரம் போயிட்டுது... அதோட நீ ஏதாவது எண்ணைப்பலகாரத்தை எடுத்துத்திண்டிடு வியோண்டு எவ்வளவு பயப்பட்டா தெரியுமே?...''

''ஏன் நான் திண்டா என்னவாம்?''

''இப்ப உனக்கிடுக்கிற நிலையில உப்புப்பண்டம், எண்ணைப் பண்டம் எல்லாம் கூடாதெண்டல்லே டாக் குத்தர் சொன்னவர்... அதாலதான் என்னைக்கூட உங் களிட்ட போகக்கூடாது எண்டு அம்மா சொன்னவ... நான் சில நேரம் உங்களுக்கும் பலகாரம் கொடுத்திடு வன் எண்டு...'

'—அவருக்கு அப்போதுதான் தன் உடல் நிலைமை தெரிகிறது. ஆத்திரம் அகல்வதுபோல், முகத்தின் கடு கடுப்புக் குறைந்தாலும்

''அது சரி என்னை எதுக்குத் தேடினியள்? ...''-என் கிறார்.

' என்ன அப்பு அப்படிக் கேக்கிறாய்?... உன்ர பூட் டிக்கு நீதான காதுகுத்தோணும்... வேறு யார் அதைச் செய்யிறது... அதோட அவர் அப்புவாலதான எங்கட கலியாணம் நடந்தது...அவர்தான வீட்டுக்குப் பெரிய மனுஷர். அவர்தான் குத்தணும் எண்டு பிடிவாதமா நிற்கிறார். உங்களைக் காணேல்ல எண்டு உங்களைத் தேடிப்போனவர்...அவரையும் காணேல்ல!''

''என்னபிள்ளை!... இவ்வளவு பேர் இடுக்கேக்க...?''- என்று கேட்கும்போதே, அவர் மனம் பெருமிதம் கொள்கிறது.

''எவ்வளவு பேர் இருந்தென்ன அப்பு... நீதான எங் களுக்கு முக்கியம்... ஆ... அவரும் உன்னைத் தேடிப் போய் வந்திட்டார்...வாவன் கெதியா அங்க ஐயர் எல் லாம் காத்திருக்கினம்!...''

— அவர் மனம் பாகாய்க் கனிந்து உருகுகின்றது.

அவரது மடியில் பூட்டி அமர்ந்திருக்கின்றாள். எல்லா வித சடங்குகளும் முடிய—

நடுநடுங்கும் கைகளினுல் பூட்டியின் காதில் குழந்தை அழ அழ, காதுகுத்தி, தங்கச் சோடி வளையங்களை இடுகின்ருர். குழந்தையின் காதுகள் குங்குமமாகச் சிவந்து வழிகின்றன. அவரால் தாங்கமுடியவில்லை. நெஞ்சம் உருகுகின்றது.

''சாரதாவைவிட இவள்தான் சரியாப் பூட்டியை உரித்து வைச்சிருக்கிருள்... காதுவளையத்தோட... காது குத்திணுப்புறகு அசல் பாக்கியம் மாதிரியே இருக்கிருள்...''- என்று யாரோ கூற, 'ஓம்!.. ஓம்!... சரியாப் பாக்கியத்தை உரிச்சுக்கொண்டு பூட்டி வந்திருக்கிருள்'- என்று கூறவும், அவர் மெய் சிலிர்க்கிறது.

குழந்தையின் அழுகையை நிறுத்த தான் மறைவாகக் கொண்டுவந்திருந்த 'கேக்' பார்சலைப்பிரித்து ஒரு துண்டை நசித்து, குழந்தையின் நாக்கில் வைக்கிருர். சிறிது குழந்தையின் அழுகை தடைப்படுகிறது. எச்சிலுடன் ஊறிய கேக், கடைவாய் வழியாக வழிவதை, ஆவலுடன் பார்த்து நிற்கும்போது—

சாரதா!..அப்புவை சாப்பிடக்கூட்டிக்கொண்டுவா.. பந்தியை மற்ருக்கள் பாக்கட்டும்... அவருக்குப் பந்திச் சாப்பாடு ஒத்துக்கொள்ளாது'- என்று அவரது அருமை மகள் கமலத்தின் குரல் அவர் செவிகளில் விழுகிறது.

ஆனுல், அவர் பசிதான் எப்போதோ அடங்கிவிட்டதே!

(யாவும் கற்பனை)



# ஆறுதற் பரிசு

யாழ்ப்பாண பஸ் நிலையத்தில் ஒரு பகற்பொழுது. ஏறத்தாழ இரண்டுமணியளவில் நவாலி—காரைநகர் 786 பஸ்ஸுக்குக் குமாரசாமியரும் சாம்பசிவமும் கியூ வரிசையில் நின்று இன்னும் பஸ் வரவில்லையே என்று இ. போ. சவுக்குச் சாபம் வழங்கிக் கொண்டிருந்த வேளையில் அந்தப் பிரச்னை முளைவிட்டது.

''வாற வியாழன் ஒருலட்சம், ஒரு லட்சம். காரில் போகலாம்.... வாறவியாழன்'' என்று சொல்லிக்கொண்டு அந்த சுவீப் ரிக்கெட் விற்பவன் வந்து நின்று ஒரு நடனம் (பரதநாட்டியம், கதக்களி, குச்சுப்பிடி ஆகியன ஒன்றுசேர்ந்த புதுநடனம்) ஆடிக்காட்டியபோது குமாரசாமியின் மனதில் ஒரு சிறு சபலம் தட்டியது. 'ஒரு டிக்கெட் வாங்கினுலென்ன?' ஆனுல் சட்டைப்பையில் கையைவிட்டு என்வலப்பை எடுத்துக் காசைப் பார்த்தபோது முகம் சுண்டியது. மொத்தமாக ஐம்பதுசதமே இருந்தது. நவாலிச் சேச்சடிக்கு பஸ்ஸுக்கு இருபது சதம் போனுல் முப்பது சதம் மிஞ்சும். ஆனுல் சுவீப் ரிக்கெட்டின் விலை ஐம்பது சதமாயிற்றே. ''சாம்பசிவத்திடமிருக்குமோ, கேட்டுப் பார்க்கலாமோ'' என்று நினைத்தார். இருக்கமுடியாது என்பது அவர் எண்ணம். இரண்டுபேருமாகத்தான் மறுநாள் வரப்போகும் தீபாவளிக்குத் துணிவகைகள், ஆளுக்கு இரண்டு போத்தல் சாராயம், வடைப் பார்சல் ஆகியன வாங்கி இனிச் செலவு செய்யக்காசில்லை.

வீட்டிற்குப் போவோம் என்று பஸ்ஸுக்கு வந்தவர்கள். என்றாலும் மனதில் எழுந்த ஆசையை அடக்க முடியாமல் குமாரசாமி கேட்டார்

''மச்சான் சாம்பசிவம், உன்னிட்டை ஐம்பதுசதம் கிடக்குதா?''

இந்த மச்சான் உறவு நிரந்தரமான உறவல்ல. இரண்டு பேரும் அயல் வீட்டுக்காரர். தூரத்துச் சொந்தமும் இருக்கும். குமாரசாமிக்கு யாழ்ப்பாணத்தில் ஒரு கடையில் வேலை சாம்பசிவம் ஒரு கந்தோரில ஏதோ வேலை. என்ன வேலையென்று தெளிவாக அவர் இன்னமும் சொன்னது கிடையாது. கையிலே இரண்டு போத்தல் இருந்தாலும் தவறணையில் வயிற்றுக்கும் சிறிது ஈந்துவிட்டுத்தான் வந்துநின்றவர்கள். இப்படியான காலங்களில்தான் மச்சான் உறவு ஏற்படுவதுண்டு

சாம்பசிவம் தனது சட்டைப்பைக்குள் புதைபொருளாராய்ச்சி நடத்திவிட்டு உதட்டைப் பிதுக்கி, ''சொறி மச்சான், மொத்தமாக உள்ளது ஐம்பது சதம்தான். பஸ்ஸுக்கு வேணும். உனக்கென்னத்திற்கு இப்பகாசு?'' என்றார்.

''இந்த சுவீப் ரிக்கெட் ஒண்டு வாங்குவம் எண்டு பாத்தனான். சரி போகட்டும். அடுத்தமுறை வாங்கிக் காரை ஓடுவம்'' என்று பிரச்னையை அலட்சியமாக ஊதிவிட்ட குமாரசாமி திடீரென விழிப்படைந்தார். அவரது மூளையில் (எட்டு அவுன்சு கடவுள் வைக்காமலா விட்டார்) ஒரு யோசனை தோன்றியது. அந்த யோசனையைச் செயல்படுத்தினாலென்ன என்ற ஒரு வேடிக்கையான குழந்தைத்தனமான எண்ணம் பிறந்தது.

''மச்சான் நீ ஒரு இருபத்தைஞ்சு சதம்தா. நானும் இருபத்தைஞ்சு சதம்போட்டு ஒரு ரிக்கெட் எடுப்பம். லக் அடிச்சுது என்றால் ஆருக்கு அரைவாசியாகப் பிரிச்செடுப்பம். நீ என்ன சொல்லுறாய்'' என்றார் குமாரசாமி.

சாம்பசிவம் சிரித்துவிட்டு ''நான் என்ன சொல்லுறது. காசு விழுந்தால் பிரிச்செடுக்கலாம். கார் விழுந்தால் இரண்டு இரண்டு சில்லாக எடுப்போமா?'' என்று கூறிக் காசைக் கொடுத்தார்.

ஐம்பது சதத்தையும் கொடுத்து ஒரு ரிக்கெட்

எடுத்தார் குமாரசாமி. சாம்பசிவம் சொன்னார். "ரிக்கெட்டை நீயே வச்சுக்கொள். விழுந்தால் அரைவாசி எனக்கு."

குமாரசாமி நம்பரைப் பார்த்தார். 15 M 12012 ஏதோ இலக்கங்களின் சாத்திரத்தில் விற்பன்னரைப் போல் கூட்டிக் கழித்துப் பெருக்கிப் பார்த்தார். நம்பிக்கையான சிரிப்பு ஒன்று வந்தது. 'மச்சான் நம்பரை நீயும் குறிச்சு வைச்சுக்கொள், வெள்ளிக்கிழமைப் பேப்பரைப் பார்ப்பம். பார்க்கிறதென்ன நிச்சயம் ஒருலட்சம் எங்களுக்குத்தான்" என்று நம்பரைச் சொல்லச் சாம்பசிவமும் பயபக்தியுடன் ஒரு என்வலப்பில் குறித்துக்கொண்டார்.

இன்னமும் 786 பஸ் வரவில்லை. கைகளில் துணிப் பார்ஸல், வடைப் பார்ஸல், சாராயப்போத்தல் பையின் பாரம் ஆகியன சேர்ந்து உறுத்தின. மழையும் இலேசாகத் தூறியது, சாம்பசிவமும் குமாரசாமியும் வெறுப்புடன் நின்று கொண்டிருந்தனர். "இன்னும் என்ன இரண்டுமூன்றுநாள் பஞ்சம்; கார் விழுந்தால் இதிலையேன் வந்து நிற்கப் போறம்" என்றார், சாம்பசிவம். குமாரசாமியின் உற்சாகம் இவரிடமும் தொற்றியிருந்தது.



தீபாவளி வந்தது. குமாரசாமியும் சாம்பசிவமும் முறையாக அதைக் கொண்டாடினார்கள். ரிக்கெட் ஞாபகம் இடைக்கிடை வராமற் போகவில்லை. சாராயம் உள்ளேபோன காரணத்தில் அறிவு மயக்கமடைந்தது உண்மைதானென்றாலும் பேரறிவு உண்டானது, அதைவிடப் பெரிய உண்மை. "மச்சான் குமாரசாமி அந்தக்காலம் கிருஷ்ணபகவான்பாடு வேலை இலேசு. ஒரு நரகாசுரன் இருந்தான். இப்ப அப்படியா. எத்தனை நரகாசுரன் றோட்டிலை உலாவுறான் பாத்தியா" என்று தள்ளாட்டமும் பாட்டுமாக உலாவும் தன் போன்ற 'பேரறிஞர்களை'ப் பார்த்துச் சாம்பசிவம் விமர்சனம் செய்தார்.

முழுகுவதற்கு எண்ணெய் வைத்தவர்கள் முழுகவேயில்லை முழுகநேரம் கிடைக்கவில்லை. எப்படியோ பொழுது கழிந்தது. குமாரசாமி மறுபடியும் ஞாபகப் படுத்தினார். "மச்சான் வெள்ளிக்கிழமை காலைப்பேப்பரைப் பார்க்க மறக்கக்கூடாது"

''மறப்பேனு?'' என்ருர் சாம்பசிவம்.

''விழுந்தால் என்ன செய்வாய் உடனே'' - குமாரசாமி கேட்டார்.

''சாக்கு ஒன்று எடுப்பேன்.''

''எதற்கு? காசைப் போட்டுக் கட்டவா?''

''நீ ஒரு பைத்தியம். சாராயம் ஒரு மூட்டை வாங்கிப் புருசல் கொண்டாட.''

இருவரும் வஞ்சகமில்லாமல் சிரித்தனர்.



வெள்ளிக்கிழமை வந்தது. வழக்கம் போலத் திருந்தாதி மணியும் முருகமூர்த்தி கோவில் மணியும் அடித்தன. குமாரசாமி படுக்கையில் கிடந்து பல சிந்தனைகளுக்கு உள்ளாகியிருந்தார். இலட்சம் ரூபாய் பரிசு கிடைப்பதுபோலவும், பரிசை வாங்கி வரும்போது ஒரு திருடர் கோஷ்டி அவரை மடக்கி அவர் கழுத்தை நெரிப்பதுபோலவும் இயமன் அவர் உயிரைக் கவர்வது போலவும் கனவுகண்டு பலமுறை பயந்து எழும்பி உலாவினர்.

தேத்தண்ணீரைக் குடித்துவிட்டுக் கையில் ரிக்கெட்டை எடுத்து 'முருகா' என்று சொல்லிவிட்டு வாசிகசாலைக்குப் போனார். பேப்பர் வரவில்லை பேப்பர்காரனுக்கு அர்ச்சனை செய்து கொண்டிருக்கையில் அவன் தூரத்தில் வருவது தெரிந்து முகபாவத்தை மாற்றிச் சிரித்து ''தம்பி எப்பிடியடா சுகம்? யாழ்ப்பாணம் மழையோ'' என்று கட்டுவிட்டுப் பேப்பரை வாங்கினர். விரித்துப் பார்க்கையிலே நெஞ்சு படபடத்தது.

மனைவியோடு பேசும்போது குமாரசாமியாருக்கு நெஞ்சு படபடப்பது வழக்கம். இன்றைக்குப் பேப்பர் பார்க்கும்போதும் அதேநிலை ஏற்பட்டதை நினைக்க அவர் ஆச்சரியமடைந்தார் இரண்டாம் பக்கத்தில் அவர்தேடிய காவியவரிகள் தென்பட்டன.

'சுவீப்' முடிவுகள் என்ற பந்தியைக் கண்டதும் அவர் முகம் வேர்க்கத் தொடங்கியது. முதலாம்பரிசு இலக்கத்தைப் பார்த்தார் ... ... இல்லை. இரண்டாம் பரிசு ... இல்லை. மூன்ரும் பரிசும் இல்லை தனது ரிக்

கெட்டை தனது மனைவியைப் பார்ப்பதுபோல் வெறுப்புடன் பார்த்தார். ஆறுதல்பரிசு நம்பர்களைப் பார்ப்போமே என்ற எண்ணத்துடன் பார்த்துக்கொண்டு நின்றவர் திடீரென விழிபிதுங்கினர்.

அவரது ரிக்கட் நம்பர் பத்திரிகையில் இருந்தது. அவரது 15 M 12012 நம்பர் ரிக்கெட்டுக்கு ஆறுதல்பரிசாக ரூபா எழுநூற்றைம்பது நாற்பது சதம் கிடைத்திருப்பதாகப் பத்திரிகை அறிவித்தது. யாரேனும் தன்னைப் பார்க்கிருர்களாவென வலமும் இடமும் கண்காணித்துவிட்டு மீண்டும்ரிக்கெட் நம்பரையும் பத்திரிகையையும் ஒப்பிட்டுப் பார்த்தார். சந்தேகமேயில்லை. கிடைத்துத்தானிருக்கிறது. ரிக்கெட்டை மடிக்குள் பத்திரமாக வைத்துவிட்டுப் புறப்பட்டார். அப்போது தான் அந்தஎண்ணம் மனதுள் நெளிந்தது.

'பரிசில் பாதி சாம்பசிவத்திற்கல்லவா கொடுக்க வேண்டும். பாதியென்ருல் சரியாக முந்நூற்றெழுபத்தைந்துரூபா இருபது சதம். கொடுக்கத்தானே வேண்டும். எதற்கும் தன்மனைவியைக் கலந்தாலோசிப்போம்' என்று நினைத்துக்கொண்டார்.



தன் மனைவியின்முன்னல் நின்று (அவன் மனைவியின் முன் இருந்து பேசியதாக வரலாறு இல்லை) ஆதியோடந்தமாக விபரங்களைச் சொல்லிவிட்டு ''சாம்பசிவத்திற்கு அரைவாசிக்காசு கொடுப்பதுதான் நியாயம்'' என்ருர்.

அவர்மனைவி (பொதுநிறம், ஐந்துஅடி உயரம், கூப்பனுக்கு அரிசி கொடுப்பது என்றஉண்மையைப் பொய்யாக்கும் தோற்றம்) மெல்லச் சிரித்துவிட்டு. (இதழைத் திறந்து பல்லைத் தெரியப்படுத்துவது சிரிப்பாஞல்) ''உங்களுக்கு என்ன பைத்தியமா?'' என்ருள். பதில் தேவையற்ற கேள்வி அது. சுமார் இருபதுவருடகாலமாக அவள் ஏற்றுக்கொண்ட உண்மை அது.

''கொடுக்காமல்விட்டால்சாம்பசிவம்என்னை அயோக்கியன், ஏமாற்றுக்காரன் என்று திட்டமாட்டாஞ? கொடுத்துவிடுவோம். அயலுக்குள் வீண்பகை வேண்டாம்'' என்ருர்.

குமாரசாமியின் மனைவியின் காண்டத்தை வாசித்துப்பார்த்தால் ஒருவிஷயம் நிச்சயமாகத் தெரியும்.

முற்பிறப்பில் அவள் ஒரு பிரபல அப்புக்காத்தாகஇருந் திருப்பாள்– இல்லாவிட்டால் அந்த முற்பிறப்பு வாசனை வராவிட்டால், எப்படி இரண்டுகேள்விகளால் குமார சாமியின் சகல வாதங்களையும் மட்டந்தட்டியிருக்கமுடி யும்? அவள் கேட்ட முதலாவது கேள்வி

''ரிக்கட் இப்போது யாரிடம் இருக்கிறது!''

''என்னிடம்தான்'-.என்றார் குமாரசாமி.

''ரிக்கட் நீங்கள் வாங்குவதற்கு அவர் பணம் தந்த தையோ, அல்லது நீங்கள் பேசிய ஒப்பந்தத்தையோ கண்ட, கேட்ட சாட்சி எவராவது உண்டா?''

''கிடையாது''

அப்புக்காத்து நிலையிலிருந்துமாறி நீதவானுகித்தீர்ப் பையும் வழங்கினாள், குமாரசாமியின் பத்தினி. 'காசில் ஒருசதமேனும் சாம்பசிவத்தாருக்குக் கொடுக்கக் கூடாது. ரிக்கட் வாங்கினது, வைத்திருப்பது இரண் டும் நீங்கள். பேசியபேச்சுக்கு எழுத்து ஒப்பந்தம் கிடையாது. இரண்டாம்பேருக்குத் தெரியாமல் கொழும்புக்குப்போய்க் காசையெடுத்துவந்து என்னி டம் (ஒரு அழுத்தம் இந்தச் சொல்லில் கொடுத்து) தந்து விடவேண்டும்.''

அப்பீல் செய்யும் எண்ணம் குமாரசாமிக்கு வர வில்லை. ஏனெனில் அவரது நாட்டில் (மன்னிக்கவும், அவ ரது வீட்டில்) மனைவிக்கு எதிராக அப்பீல் செய்வது மகாதவருக கருதப்படும் குற்றமாகும்.



''இன்றைக்கு வெள்ளிக்கிழமை. நான் கோயிலுக் குப்போகவேண்டும்'' என்று சாம்பசிவத்தின் மனைவி சொன்னபோதுதான் அவருக்கு ரிக்கெட் ஞாபகம் வந் தது. நம்பர் எழுதிய என்வலப்பைத் தேடியெடுத்து இரண்டுவீடு தள்ளியிருந்த ஒருமாஸ்டர் வீட்டுக் குப்போய்ப் பேப்பரை எடுத்துப் பார்த்தார் சாம்பசிவம். ஆறுதல்பரிசாக எழுநூற்றைம்பது ருபா நாற்பதுசதம் கிடைத்தவிஷயம் தெரியவந்தது.

குமாரசாமிக்கு விஷயத்தைச் சொல்லிவிட்டுத்தான் தன்மனைவிக்கு விஷயத்தைச் சொல்லவேண்டும் என்ற பரபரப்பில் தன்வீட்டைத்தாண்டிக் குமாரசாமி வீட்

டிற்குள் நுழைந்தார். மனைவி வழங்கிய ஒருபக்கத்திர்ப் பின் பயங்கரசொரூபத்தை நினைத்துக் கலங்கிக்கொண்டு ஈச்சார்க்கட்டிலில் வெளிறியமுகத்துடன் படுத்திருந்த குமாரசாமியைக்கண்டார்.

''மச்சான் லக்குப்பேசியிருக்கடா. வா முதலில் ஒரு அரைப் போத்தல் எடுத்துக் கொண்டாடுவம்'' -சாம்ப சிவம் மகிழ்ச்சியால் துள்ளினார்.

குமாரசாமிக்குத் 'திக்' கென்றது.

''சாம்பசிவம் நீயென்ன சொல்லுகிறாய்.''

''குமாரசாமி, ஆறுதல் பரிசு எழுநூற்றைம்பது ரூபா கிடைச்சிருக்கு நாங்கள் வாங்கின டிக்கெட்டுக்கு. ஆளுக்கு முந்நூற்றெழுபத்தைஞ்சுக்குப் பிழையில்லை. நீ இன்னம் பேப்பர் பார்க்கவில்லையோ.''

குமாரசாமி வாய் திறந்து பதில் சொல்லத்தன்னைத் தயார்ப்படுத்தும் பொழுது அவரது மனைவி வந்து முன் நின்றாள்.

''என்ன விஷயம்?'' என்றாள் சர்வசாதாரணமாய்.

''எங்கள் இரண்டுபேருக்கும் சுவீப்பில் பரிசுகிடைச் சிருக்கு. இரண்டுபேரும் காசுபோட்டு ரிக்கெட் எடுத்த நாங்கள்'' என்றார் சாம்பசிவம்.

மனைவியிடம் இருந்து வந்த சைகையென்னவென்று குமாரசாமி விழிக்கையில் சாம்பசிவம் சொன்னார் ''குமாரசாமி நீ போய்க்காசையெடுத்துவா. பயணச் செலவுபோக மிச்சத்தைப் பிரிப்பம்''

''பிரிக்கிற கதையென்னவெண்டு விளங்கவில்லை'' யென்று சொன்ன குமாரசாமியின் மனைவி, ''ஆரிடம் ரிக்கெட் இருக்கிறதோ அவர் போய்க் காசையெடுக்கட்டும்'' என்றாள் சூசகமாக.

சாம்பசிவம் விழிப்படைந்தார். கதைபோகிற போக்கு நல்லாயில்லை என்று உணர்ந்து கொண்டார். குமாரசாமியும் உற்சாகமாயில்லை. ஒருவேளை...

''என்ன குமாரசாமி, உன்னுடைய பெண்சாதி யின்ரை கதை ஒடு மாதிரியாயிருக்கிறது. விஷயம் எல் லாம் சொல்லியிருப்பாய்தானே, என்ரை பங்குக்கு

ஒரு பழுதும் இராதெண்டு நினைக்கிறன்'' என்றார். மிதிக்கவும் முடியவில்லை. தாண்டவும் முடியவில்லை. இக்கட்டான நிலை.

குமாரசாமி பதில் சொல்லியாகவேண்டும். மனைவியைப் பார்த்தார். பார்க்கும் நிலையில் அவள் இல்லை. சாம்பசிவத்தை நிமிர்ந்து பாராமல் நிலத்தைப் பார்த்துக்கொண்டே திருமணப்பதிவின்போது சத்தியம் செய்யும் புதுமணப்பெண் போல (சுமார் இருபது வருடத்திற்கு முன்னைய உவமை, தற்போதைய உவமைஅல்ல) விட்டுவிட்டு, வார்த்தைகளை இடையில் விழுங்கிக் கொண்டு சொன்னார்.

' சாம்பசிவம் நீ கதைக்கிறது உனக்கே நல்லாயிருக்கோ யோசிச்சுப்பார். ரிக்கெட் வாங்கவேண்டுமென்று நினைச்சவன் நான், வாங்கினவன் நான், வைச்சிருக்கிறவன் நான். உன்னிட்டை இருபத்தைஞ்சு சதம் வாங்கினது உண்மைதான். மற்றதெல்லாம் (பாதிதருகிறதென்ற ஒப்பந்தம், சொல்லவும் வாய் கூசிக் கம்பர் சொன்னது போல் 'மண்ணே கொள் நீ, மற்றையதொன்றும் மறவென்ற' பாணியில்) பகிடிக் கதை. அன்றைக்குப் போட்ட தண்ணியிலை கதைச்ச கதை நான் மறந்தே போனேன். நீ என்னடாவென்றால்...'' இழுத்தார் குமாரசாமி. அவர் கண்கள் மனைவியின் பக்கம் திரும்பின.

தான் சொல்லிக்கொடுத்ததுபோல், எத்தனை குறுக்குக் கேள்விகளுக்கும் மசியாமல், சாட்சி சொல்லும் தன் கட்சிக்காரரைத் திருப்தியுடன் பார்க்கும் அப்புக்காத்தைப்போல தலையாட்டினாள், அவர் தர்மபத்தினி. 'சபாஷ்' என்ற அர்த்தம்.

சாம்பசிவத்திற்கு நெற்றிப்பொட்டில் அடித்தது போலப் பொறிகலங்கியது.

''அடே பாவி, அயோக்கியா, காசு வந்தவுடனை கண் மறைஞ்சு போச்சுதாடா. நீ மனுஷனோடா'' என்று கத்தினார்.

குமாரசாமி பேசவில்லை. மனைவியின் ஏற்பாடு அது. அவர் துள்ளுவார். நீங்கள் 'கம்'மென்று இருக்கவேண்டுமென்று முன்பே பார்த்த ஒத்திகை.

''டேய், இப்பிடி அநியாயம் நினைச்சாயோ தெய்வம் கேட்காமல் விடாதடா'' சாம்பசிவம் அனலாய் வீசினார்.

கடவுள் கேட்பதைப் பற்றிக் குமாரசாமி அவ்வளவு அக்கறை சாட்டவில்லை. சாம்பசிவத்திற்குக் காசைக் கொடுக்" ஒப்புக்கொண்டால் அவர் மனைவி கேட்கும் கேள்விகள் நிச்சயம் அதைவிட மோசமாயிருக்கும். ஏனெனில் குமாரசாமிக்கு அவர் மனைவிதான் கண்கண்ட தெய்வம்.

"உங்களுக்குக் கடைக்குப்போக நேரமாக வில்லையா?" என்று கேட்டாள். குமாரசாமியை அவர் மனைவி. சாம்பசிவத்தைப் பார்த்து 'வீணாக ஏன் கூச்சல் போடுகிறீர் போய்வாரும் கெட் அவுட்' என்று சொல் லும் அர்த்தம் தொனிக்க.

குமாரசாமி உள்ளே போக எழுந்தார் சாம்பசிவம் வேறுவழியில்லாமல் திடும்ப வேண்டியதாயிற்று. எதிரி வீட்டில் சண்டை போடமுடியுமா?

வீட்டுக்கு வந்த சாம்பசிவம் தன் மனைவியிடம் சகல வற்றையும் சொல்லிக் "கந்தோருக்குப் போய்விட்டுப் பின்னேரம் வாறன். தம்பி குமாரசாமியருக்கு ஒரு பாடம் படிப்பிச்சுக்காட்டிறன்" என்று சொல்லிவிட் டுப் புறப்பட ஆயத்தங்கள் செய்தார்.

மாலை நேரம். ஐந்தரை மணிக்கு மேலே, ஆறு மணி க்கு உள்ளே. சாம்பசிவம் கந்தோரில் இருந்து வந்து சைக்கிளைச் சுவரில் சாத்திவிட்டுத் தன் மனைவியைக் கேட்ட முதல் கேள்வி "குமாரசாமியெண்ட வள்ளல் வந்துவிட்டாரா" என்பதுதான். அவள் பதில் சொல்லு முன்னர் பக்கத்து வீட்டில் இருந்து பதில் "எங்கடை கதை ஒருத்தருக்கும் தேவையில்லை; அவையவை தங் கடை அலுவலைப் பார்க்கவேண்டும்."

இது குமாரசாமி சொன்ன பதில் அல்ல. குமார சாமியின் தர்மபத்தினி சொன்ன பதில். சாம்பசிவம் தன் மனைவியைப் பார்த்தார். 'களத்தில் இறங்கிடோது' என்ற கருத்து. அவள் சொன்னாள், "வாயை மூடிவைச் சுக்கொள்ளுங்கோ, இல்லாவிட்டால் சந்தி சிரிக்கும்படி கக்கிப்போடுவன் உங்களைப்பற்றி" பாடசாலையில் படிக் கும்போது பேச்சுப் போட்டியில் பரிசு வாங்கியவள் சாம்பசிவத்தின் மனைவி. ஐந்து பிள்ளைகளுக்குத் தாயா கினாலும் இளமையிற் கற்ற வித்தையை அவள் மறக்க வில்லை.

குமாரசாமியின் மனைவி பார்த்துக்கொண்டிருப்பாளா? திருப்பிச் சுடச் சுடக் கொடுத்தாள். தம் மனைவிமார் சண்டைபோடுவதைக் குமாரசாமியும், சாம்பசிவமும பார்த்துக்கொண்டிருந்தனர். இடையிடையே சில நல்ல 'பொயின்டு'களைத் தம் மனைவிமாரிடம் கொடுத்தனர் மேலும் மேலும் பேசும்படி.

"இந்த அநியாயம் எங்கையாவது நடக்குமா? பரிசு விழுந்தால் பாதி தருகிறேன் என்று சொல்லிக் காசு வாங்கி ரிக்கெட் வாங்கி, இப்ப என்னடாவெண்டால் நீயார் என்று கேட்கிறியள். நீங்க நல்லாயிருப்பியளோ" சாம்பசிவத்தின் மனைவி கேட்டாள்.

இதற்குப் பதில் ஏதும் பேசாமல் திடீரென உள்ளே போனுள் குமாரசாமியின் மனைவி. தோற்றுப்போய்விட்டாளா? சாம்பசிவமும் அவர் மனைவியும். பிள்ளைகளும் பார்த்துக்கொண்டிருந்தனர். மறுபடியும் குமாரசாமியின் மனைவி தோற்றமளித்தாள் வேலிப்பக்கம். இப்போது அவள் கையில் ஒரு கடுதாசி இருந்தது. சுவீப் ரிக்கெட் 15 M 12012.

ஒற்றைக் கையில் ரிக்கெட்டை உயர்த்திப் பிடித்த தோற்றம் பாண்டியன் சபையில் ஒற்றைச் சிலம்புடன் கண்ணகியாகக் காலம்சென்ற பசுபுலேடி கண்ணும்பாள் நின்ற தோற்றத்தை ஞாபகப்படுத்தியது.

"எடியே, இதைப்பார்! இதுதான் ரிக்கெட் அவர் வாங்கினர்; அவருக்குப் பரிசு விழுந்தது. உங்களிட்டை ரிக்கெட் இருந்தால் நீங்களும் போய் வாங்குங்களன். எங்களோடை ஏன் தனகிறியள்."

குமாரசாமியின் பத்தினி ஒரேயொருமுறை பாடசாலை நாடகம் ஒன்றில் சாமரை வீசும் பெண்ணாக வசனம் எதுவும் பேசாமல் வந்துபோன அனுபவம் ஒன்றுதான் பெற்றிருந்தாள். ஆனால் அவள் முகபாவம் பேசிய பேச்சின் அட்சர சுத்தம், தொனி எல்லாம் அவளை ஒரு பிறவி நடிகையாகக் காட்டின. இலங்கையில் யாராவது கண்ணகி படம் தயாரிப்பதானல் அந்தப் பாத்திரத்திற்கே உயிரூட்ட வல்லவள் குமாரசாமியின் பத்தினிதான் என்பதைத் தயவு செய்து ஞாபகம் வைக்கவேண்டும்.

சாட்சியில்லா நியாயம் தம்பக்கம் இருந்தாலும் சட்டப்படி குமாரசாமியின் பத்தினியின் நியாயம்தான்

ஊரில் கொடிகட்டும் என்ற எண்ணம் சாம்பசிவத்திற்கும், அவர் மனைவிக்கும் உறைத்தது. ஆகவே எதிரியை மடக்கச் சில குறுக்கு வழிகளைக் கையாண்டாலென்ன என்று சாம்பசிவம் கருதி அந்தப் 'பொயின்டை' மனைவியிடம் சொல்ல அவள் அகமகிழ்ந்து யப்பான் மேல் அமெரிக்கா போட்ட ஒரு அணுக்குண்டைப்போல ஒரு வார்த்தைக் குண்டைப் போட்டாள்.

''ஆரெண்டு தெரியாது பள்ளிக்குப் போய்வந்த தங்கடை குமர்ப்பிள்ளையை இடையிலை படிப்பை நிறுத்தி வீட்டிலை வைச்சிருக்கிறது. ஊரில் தெரிந்த இரகசியம் இது. அப்பிடி ஆட்கள் இல்லை நாங்கள்'' சாம்பசிவத்தின் பத்தினி சொன்னாள்.

குமாரசாமியின் புதல்வி பத்தாம் வகுப்பில் படித்து வந்தபோது கடிதம் எழுதும் கலை இயல்பாகவே அவளுக்குக் கைவந்ததும், ஒரு வாலிபன் அவள் வீட்டுப் படலையடியில் வந்ததும், அடிக்கடி சைக்கிள் பழுதாகி ரிப்பேர் செய்யத் தொடங்கியதும், விஷயம் விபரீதமாக முன்னர் (அல்லது விபரீதம் ஏதோ நடந்துவிட்டதென்ற பயப்பிரமையினாலோ) அவளைப் பாடசாலைக்குப் போக வேண்டாமென்று குமாரசாமி மறித்துவிட்டார். நொந்த இடம் அது. அதில் தைக்கும்படி சொல்லிவிட்டாள்.

குமாரசாமியின் மனைவி அடிபட்ட நாகம் போலச் சிலிர்த்தெழுந்தாள்.

''என்னடி சொன்னாய்? யாரைப் பார்த்தடி சொன்னாய்? உன்னுடைய தங்கச்சியைப்போல நாங்கள் ஊர் பேர் தெரியாத மாப்பிள்ளையைக் கூட்டிக்கொண்டு உலாவவில்லை'' பதில் குண்டுதான் என்றாலும் பலம் குறைவுதான். எனவேதான் குமாரசாமியின் மனைவியின் ஆத்திரம் அடங்கவில்லை. ''என்ன பார்த்துக்கொண்டு நிக்கிறியள் அவளின்ரை நாக்கையடக்காமல்'' என்றாள் புருஷனைப் பார்த்து. குமாரசாமி நிலைமை மோச நிலையைக் கடந்து மிக மோச நிலையை அடைவதை அறிந்து தங்கள் வலிமையை இனிவாய்ச் சொற்களால் நிலைநாட்ட முடியாதென்று போர்ப்பிரகடனம் செய்தார்.

''இனி யாராவது எங்கடை குடும்பக் கதைபற்றி ஒரு சொல்லுச் சொன்னால் ஆண்பெண்ணென்று பார்க்க மாட்டன். முழங்காலிற் சில்லு கழட்டிப்போடுவன்''

தன்னுடைய கணவன் நிராயுதபாணியாக நின்று போர்ப்பிரகடனஞ் செய்ததைக் கண்ட குமாரசாமியின் மனைவி உள்ளே சென்று யாழ்ப்பாண மக்களின் தேசிய ஆயுதமாகிய உலக்கையைக் கொண்டு வந்து கொடுத்தாள். அதைத் தன் வலக்கரத்திறை் பெற்றுக்கொண்டு நிலத்தில் இரண்டுதரம் குத்தித் தன் வல்லமையைக் காட்டினர். தீபாவளியன்று இறைச்சிக்குத் தூள் இடித்த உலக்கை யாதலால் தட்டிய வேகத்தில் தூள் பறந்து குமாரசாமி யின் கண்களிற் படலால் அவர் கண்ணெரிந்தது. கசக் கியமையால் கண் சிவந்தது. தன் கணவன் கோபத்தி ஞல் விழி சிவந்து யுத்த சன்னத்தனுக நிற்பதாக அவர் மனைவி எண்ணி மிக ஆனந்தம் கொண்டாள்.

இத்தனை ஆயத்தங்களும் அமளிக்களங்களும் வேலி க்கு அப்பால் நிகழ்வதைக் கண்ட சாம்பசிவம் சிறிது அசந்து போனர். குமாரசாமி அடித்துப் போடுவானே? இனியும்தானும் படைக்கலந் தேடாமல் நிற்பது சரி யல்லவென்று நினைத்தவேளை அவரது குறிப்பறிந்த அவரது அருமை மனைவி ஆயுதந்தேடப் புறப்பட்டு யாழ்ப்பாண மக்களின் மற்றொரு தேசிய ஆயுதமாகிய அலவாங்கைக் கொண்டு வந்து தன் பர்த்தா கையிற் கொடுத்தாள். போன தைரியம் திரும்பிவர, "டேய் குமாரசாமி ஏலுமானுற் தொட்டுப்பாரடா?"

"கதைச்சால் தெரியும் சங்கதி" என்றுர் குமார சாமி.

"என்னடா செய்வாய்? கதைக்கப் போறன்" என் றுர் சாம்பசிவம்.

"நாரியிலே அடிச்சு முறிச்சுப்போடுவன். மரியா தையாய்ப் போம்காணும்" என்றுர் குமாரசாமி.

இருவருக்கும் வேலியைக் கடக்கப் பயம். எல்லை தாண்டிப்போய் அடித்தவன்கேஸ் கோர்ட்டிலே பலவீ னப்படும் என்பது இருவரும் அறிந்த உண்மை. எனவே தயங்கினர். ஆனல் அவர்கள் மனைவிமார் விட வில்லை. தூண்டிக்கொண்டிருந்தனர்.

"நீ ஒரு அயோக்கியன்" என்றுர் சாம்பசிவம்.

"வாயைக்கழுவு. நீபெரிய 'நீதிமானே'" என்ற குமாரசாமி உலக்கையைத் தூக்கிக் காட்டினர்.

''எடே இது பயந்த கட்டையில்லையடா'' என்று அலவாங்கை ஓங்கினார் சாம்பசிவம்.

போர் தொடங்கவேண்டியதாயிற்று.

இரவும் இல்லை பகலும் இல்லையென்று சொல்லப் படும் அந்திமாலைவேளையில், குமாரசாமியின் காணியா சாம்பசிவத்தின் காணியா என்று நிச்சயம் சொல்ல முடியாத வேலி எல்லையில் உலக்கையைத் தூக்கியபடி குமாரசாமியும், அலவாங்கைச் சுழற்றியபடி சாம்ப சிவமும் மோதிக்கொண்டனர்.

அவர்கள் பத்தினிமார் சண்டையென்றால் என்ன இரத்தமென்றால் என்ன என்பதை நேர்முகமாகக் கண் டார்கள். இதுவரை சண்டையைக்கண்டது சினிமாப் படத்தில்தான். அதுவும் தமிழ்ச்சினிமாப் படத்தில் தான் படத்தில் வந்த சண்டையை ரசிக்க முடிந்தது. இது மகாகோரமாயிருந்தது. ''ஐயோ பாவி, என்னை அவரை அடிக்கிறானே'' எனத் திருமதி குமாரசாமி கூக் குரலிட அவள் சொன்னதையே நான் சொல்வதா என வார்த்தைகளை மாற்றி ''என்னை அவரைப் படுபாவி கொல்லுறானே'' என்று திருமதி சாம்பசிவம் ஒப்பாரி வைக்க இருபக்கத்துக் குழந்தைகளும் 'அப்பா, அப்பா' என்று ஓலமிடச் சண்டை நடைபெற்றது.

அருமையான வாய்ச்சண்டையைத் திறந்தவாய் மூடாமல் ரசித்துக்கொண்டிருந்த அந்த ஒழுங்கையைச் சேர்ந்த பெருமக்கள் (பெண்கள்தொகை கணிசமான அளவுகூட) அடிதடியைக் கண்டவுடன் சாட்சி சொல்ல வேண்டிவருமே என்று பயத்தால் வீடுநோக்கிச் செல் வாரும். விலக்குப்பிடிக்கச்செல்வாருமாய் இருந்தனர். வேலிப் பூவரசொன்றைப் பிடுங்கி தன்பெரிய வண் டியைஆட்டிக்கொண்டுநடுவே புகுந்த சுப்பையர் 'விடுங் கடா' என்று சொல்லி பூவரசந்தடியை வலமும் இடமும் ஆட்டிப் பந்தோபஸ்துச்சபையின் வேலையை மேற் கொண்டார்.

சண்டை நின்றது. குமாரசாமியும் சாம்பசிவமும் தரையில் கிடந்தனர். இரத்தம் பெருகி வேட்டியெல் லாம் இரத்தக்கறை. ''ஆராவதுபோய்க் கார்பிடிச்சு வாருங்கோ, பெரியாஸ்பத்திரிக்குக் கொண்டு போக வேண்டும்'' என்றார் சுப்பையர்.

கார்கள் வந்தன. ஒருகாரில் குமாரசாமியை ஏற்றினர். அவரது மனைவியும் மூத்தமகளும் சுப்பையரும் அதில் ஏறினர். மற்றக்காரில் சாம்பசிவம் ஏற்றப்பட்டார். அவருக்குத் துணையாக அவர் மனைவியும் மகனும் ஏறினர். கார்கள் புறப்பட்டன. கார் புறப்படுவதற்கு முன்னர், திருமதி குமாரசாமி தனது கலைந்த கூந்தலை முடிந்துகொண்டே ஒரு சபதம் செய்தாள். ''லொத்தரில் விழுந்தது எழுநூறும் செலவழிஞ்சாலும் செலவழியட்டும். என்ரை அவரைத் தொட்டபாவியை இரண்டு மாதமாவது மறியலுக்கு அனுப்பாவிட்டால் நான் ஆரெண்டுபார்ப்பம்''.



மற்றநாள் யாழ்ப்பாணம் பெரியாஸ்பத்திரிக் காயவார்ட் ... .... நேரம் பகல் 12-30 மணி. நோயாளரைப் பார்வையிட அனுமதியுள்ள காலம். பக்கத்து வீட்டுக்காரரான குமாரசாமியும் சாம்பசிவமும் பக்கத்துப்பக்கத்துக் கட்டிலில் கிடந்தார்கள், குமாரசாமிக்கு வலதுகாலிலும் தோள்மூட்டிலும் தலையிலும் காயம். சாம்பசிவத்திற்குத் தலையிலும் இரண்டு கால்களிலும் காயம். புதுமாப்பிள்ளைக்குத் தலைப்பாகை கட்டினது போல் தலையில் வெகுஅழகாகக் கட்டியிருந்தார்கள். ஆளைஆள் பார்க்காமல் கிடந்தார்கள்.

இருவரது பத்தினிமாரும் பிள்ளைகளும் உறவினரும் கட்டிலின் பக்கத்தில் நின்று பார்த்துக்கொண்டிருக்கும் அவ்வேளையில் குமாரசாமியார் தனது மகள் வைத்திருந்த அன்றைய பத்திரிகையை வாங்கிப் படித்தார். ரொடீஷியாப்பிரச்னை, வாலிபன் கன்னத்தில் கன்னி அறைந்த விபரம், மனைவியின் தொல்லை தாங்காமல் கணவன் தற்கொலை செய்த சம்பவம் (அவன் புத்திசாலி) ஆகிய விஷயங்களைப் பார்த்துக்கொண்டு வந்த அவர் திடீரென நின்றார். விழியை உயர்த்தி எழுத்து எழுத்தாக அந்தச் செய்தியை இரண்டுமுறை படித்தார். அழுகை, சிரிப்பு, ஆத்திரம் எல்லாம் கலந்து வந்தன.

''மச்சான்'' என்றார் சாம்பசிவத்தைத் திரும்பிப் பார்த்து. சாம்பசிவம் திரும்பவில்லை. பெண்களுக்கோ ஆச்சரியம் தாங்கமுடியவில்லை. குமாரசாமிக்குப் பைத்தியமா? பரம எதிரியை உறவுசொல்லி அழைக்கிறாரே.

''மச்சான் சாம்பசிவம், பெரிய கோவம் வந்துவிட்டுது. உனக்கு என்ன? இந்தப் பேப்பரைப்பார்'' பேப்பரைத் தன் பிள்ளையிடம் கொடுத்துவிடச் சாம்பசிவமும் ஆச்சரியம் தாங்காமல் பேப்பரை வாங்கினார்.

''இரண்டாம் பக்கத்திலே மேலேபார்'' என்றார் குமாரசாமி. சாம்பசிவம் பார்த்தார். அதில் இருந்த செய்தி இது;

''சுவீப் முடிவுகள் — ஒருதிருத்தம்

நேற்று எமது பத்திரிகையில் வெளியாகிய சுவீப் முடிவுகளில் ஒருதவறு நேர்ந்ததற்கு வருந்துகிறோம். ஆறுதற்பரிசுபெற்ற ரிக்கெட் நம்பர்களில் ஒன்று 15 M 12012 என்று வெளியாகியிருந்தது. அதுதவறு, அந்த ரிக்கெட் நம்பர் 15 M 13012 என்பதாகும்''.

முதலில் தனக்குள் வாசித்த சாம்பசிவம் இரண்டாம்முறை சகலரும் அறிய உரக்க வாசித்துவிட்டுச் சிரித்தார் வேதனையுடன். பெண்களின் முகத்தைப் பார்க்க முடியவில்லை.

''விழாத பரிசுக்காக அடிபட்டோம். மச்சான் ஆஸ்பத்திரிச் செலவோடை போகட்டும். கோட்டடிக்குப் போய் வேப்பமரத்தின் கீழையிருந்து மேலும் செலவு வேண்டாம். நீ என்னசொல்லுறாய். காயம் உனக்குப் பலமோ'' என்று கேட்டார் குமாரசாமி.

சாம்பசிவம் பேசவில்லை. அவரது காயம் வலித்தது, வேதனையோடு சிரித்துத் தலையாட்டினார்.

(முற்றும்)

# சிறு கை நீட்டி

**காலை** இளம் வேளையில் மோனத் தவமியற்றும் கோலம்.

படிப்பறையிலிருந்து அன்றைய விரிவுரைகளை ஆயத்தம் செய்துகொண்டிருந்த சதாசிவத்தாரின் பார்வை யன்னலுக்கு வெளியே தெறித்துப் பாய்கின்றது.

தனிக்கிளையைத் தவிசாகப்பெற்ற ஒற்றை ரோஜா யௌவனப் பூரிப்பின் குமிண் நகையைப் பூட்டவிழ்க்கும் கருமத்தில் ஈடுபட்டிருக்கின்றது.

பாடங்களில் பற்று இற்றதோ? பூவில் பற்று மிகுந்ததோ?

சதாசிவத்தார் விருப்பு வெறுப்பு எதற்கும் வெளிச்சமிடா இயல்பினர். நீண்டகாலமாக அவருடன் நெருங்கிப்பழகுபவர்கள்கூட அவர் ஆஸ்திகரா, நாஸ்திகரா என்பதைத் தீர்மானிப்பதற்காக இற்றைவரை ஆராய்வுகள் நடத்தி வருகின்றார்கள். அவருடைய விரிவுரைகளிலும், உரையாடல்களிலும் நாஸ்திகக் கருத்துக்கள் விரவிக் கிடக்கும். ஆனால் அவருடைய நெற்றியில் விபூதிப் பட்டையும் சந்தனப் பொட்டும் நித்திய சின்னங்களாக நிலைத்துள்ளன.

அலையும் மனத்தைப் புத்தி சுண்டியிழுக்க, பார்வை மேஜைக்கு நீளுகின்றது. ஒருரூபாய் நாணயம், அந்த இடத்தில், அப்படியே இருக்கின்றது. நூலின் பக்கங்களுக்கிடையில் புலனை நிலை நிறுத்தும் முனைப்பு.

'பித்தாப்பிறை சூடி......'

அவருடைய மனைவி தேவாரம் பாடத்தொடங்கி விட்டாள். பூஜையறையிலிருந்து அவளுடைய குரல், பக்தியின் முற்றிய பாவத்துடன் பரம்புகின்றது. குயிலின் குரலிலே கோடிட்டிருக்கும் சோகம், அக் குரலிலே அருகு கட்டியிருக்கின்றது.

நினைவித்திரியிலே தீ வைக்கப்படுகின்றது. உடற் கொட்டிலே செம்மிக் கிடக்கும் வெடி மருந்திலே தீ பற்றிப் படர்ந்ததும்...

கடந்த ஐந்து ஆண்டுகளாக நியமம் குறித்தது போல இதே வேளையில் தீ உற்கைகளை உகுத்து அவ ருடைய உள்ளம் கருகிக்கொண்டேயிருக்கிறது. அஃது அவருடைய அந்தராத்மாவைத்தவிர வேறு எதுவுமே அறிந்துகொள்ளாத பரம இரகசியம்.

'பித்தா பிறைசூடி பெருமானே அருளாளா'

வினையின் பலிதம்... நாலுபக்கமும் பொறிகள் கிளம்புகின்றன! தீயி பொறிகளோ? நினைவின் பொறிகளோ? அவற்றின் வண்ணமும்பல; வகையும் பல!

## பொறி ஒன்று

'தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதி சூடி'

பக்தியில் புதுப் புனலிலே தோய்த்தெடுக்கப்பட்ட பிஞ்சுக்குரல் பூஜையறையிலிருந்து மிதந்து வருகின் றது.

படிப்பறையிலிருந்து விரிவுரைகளை ஆயத்தஞ் செய்து கொண்டிருக்கும் சதாசிவத்தாரின் புலன் அப்பாட லிலே ஒருகணம் தரிக்கின்றது.

பாடுபவள் ரேணு. முதிர்ந்த பக்தியைப் பிழியும் அவளுடைய பிஞ்சுக்குரலில் தனி த்வனி களைகட்டுகின் றது.இந்த ஈடுபாடு அவருடைய பலவீனம். அதிலேகூட ஒருவகை இதம் ஊறுகின்றது.

சின்னஞ்சிறு பெண்! அவளுடைய வயதைப் பிற ந்த நாள் என்ற சரித்திர நிகழ்ச்சியிலிருந்து கணக் கெடுக்க மனம் மறுக்கின்றது. 'பெண் வளர்த் தியோ? பீர்க்கு வளர்த்தியோ? மகள் ரேணு இன் னும் ரெண்டு மூன்று வருசத்திலே புத்தி அறிஞ்சிடு வாள். நீங்கள் சிவனேயென்று சரித்திரம் உண்டு-வகுப்புக்கள் உண்டு பிரசங்கங்கள் உண்டு என்று திரி யுங்கோ... அப்புறம் எதில் வந்து விடியப் போகி றதோ பாத்திருங்கள்' என்று தினமும் மூன்றுவேளை படியளப்பதுபோல, இதனை ஞாபகப்படுத்தா விட் டால் மனைவியைப் பொறுத்தவரையில் அன்று பிறவாநாளே. ஐந்துவயதை நோக்கி எழில்நடை போடும் ரவியுடன் ரேணு விளையாடிக்கொண்டிருக் கும்பொழுதுஅவளுக்கு ஆறு வயதுகளுக்குமேல் கணி க்க மனம் ஒப்புவதேயில்லை.

'தோதுதைய செவியன் விதையேறியோர்...'

குதலையின் இனிமையும், குறும்பின் ஏமாப்பும் இழையோடக் குருத்துக்குரல் ஒன்று பூஜையறையிலி ருந்து புதிதாகக் கிளம்புகின்றது.

''அம்மா இவன் தம்பி செய்யிறதைப் பாருங்கோ வன்...''

''மற்போருக்கு சோடி கிடைத்து விட்டதா?'' அடுக்களையிலிருந்து புறப்பட்டுவரும் அம்மாவின் குரல் அதிகாரம் செலுத்துகின்றது.

''நான் தேவாரம் பாடத் துவங்கினால், அவன் தானே நேரே நேரே வந்து குழப்பிறவன்—''

சிணுங்கலின் சிரசுதயம்.

''ரவி, அக்காச்சி பாடட்டும் மகன்... நீங்க இஞ்சை அம்மாட்ட வாருங்கோ...''

''மாத்தன்... நானும் பாதுவன்...''

அடுப்படி அதிகாரம் ரவியிடம் செல்லுபடியாவ தில்லை.

''மகள் ரேணு — தம்பி சும்மா பாடினால் அவனுக் குத்தானே வாயுளையப் போகுது...? பக்தியோடை நீங் கள் பாடினால், உங்களுடைய குரல்தானே ஆண்டவ னுக்குக் கேட்கும்!'' —பக்கச் சாய்வானதாக இருந்தா

லும் நடுத்தீர்ப்பு வழங்கிய திருப்தியை அடுப்படிக் குரல் அடைகின்றது.

சதாசிவத்தார் நூலின் பக்கங்களைப் புரட்டுகின்றார்.

நூல்கள் —படிப்பு— வித்துவம் எல்லாம் மனைவிக்கு அற்பமானவை. எதுவும் பக்திமயமானதாக நடைபெறுவதான குருட்டுப்போக்கு குருட்டுத்தனமான பக்தி. குருட்டுத்தனம் சேர்ந்தன, நியாயஞ் சேர்ந்தனவல்ல. ஆனால் அவளுடைய பக்தி என்ற நிலைக்களனில், அந்தக் குருட்டுப்போக்கிலேகூட நியாயம் இருப்பதான சாயல் எதனால் தோன்றுகின்றது? அடிவானம் வெறும் சாயல் என்பது புத்தி பூர்வமாகத் தெரிகின்றது. ஆனாலும் அதன் ரம்மியத்தில் மனத்தை ஒன்றுபடுத்தவும்முடிகின்றது.

'பீடுடைய பிரமாபுரப் பெம்மானிவனன்றே'...

பிஞ்சுக்குரலிலே காம்பீரியக் கவர்ச்சி குழைத்து, ரேணு தேவாரத்திற்கு முத்தாய்ப்பு வைக்கின்றாள். ரவியின் 'பிற்பாட்டு' தூர்ந்துபோக பக்தியின் ஓங்காரமும், அபிநயத்தின் நசிவும்!

சதாசிவத்தாரின் புலன் யாழ்ப்பாண இராஜ்யத்தின் கடைசி அரசனுடைய வரலாற்றில்செப்பமாகவேர் இறங்குகின்றது,

## அடுத்தபொறி

பண்டைய யாழ்ப்பாண இராஜ்யத்தின் எல்லைகளையும், பரப்பினையும் சதாசிவத்தார் பெருமையுடன் மனக்கண்களிலே துலக்கிப் பார்க்கின்றார்.

'போர்த்துக்கேயர் இந்த மண்ணிலேகாலடி எடுத்து வைக்காதிருந்தால்......?'

'இருந்தால்?' என்ற நுணுக்கமான 'முச்சை' போட்டு, கற்பனைப் பட்டத்தை எதிர்க்காற்றிலே பறக்கவிடுகிறார்.

மேலெழுந்த பட்டத்தின் 'வால்' இடைவெளியில் அறுந்து விழுந்ததா? பட்டம் திடீரெனக் கரணமடித்

துத் 'தொம்'மென்று நிலத்திலே குத்திக் கிடக்க ஏது என்ன?

''அம்மா, அம்மா...'' அதற்குமேல் ஒலிகள் சொல்லுருவைந்தாங்க மறுக்கின்றன, தொண்டை துக்கத்திற்கனக்க ரேணுவின் விக்கல்!

ஏன்டீ? ஸ்கூலுக்குப் புறப்பட்டு நின்று முட்டைக் கண்ணீர் வடிக்கின்ருய்?''

வானத்தில் வலம்வரும் முகிற்கூட்டங்களிலே ஆண்டவன் தண்ணீரை குறைத்து வைத்திருப்பதைப் போன்று, கண்ணீரை மறைத்து வைத்திருப்பதற்குப் பெண்களின் கண்களைத் தேர்ந்தெடுத்திருக்கின்ருன் போலும்.

''தையல்பெட்டியிலே நான்வைத்திருந்த ஒருரூபாயைக் காணேம்...''

''உனக்கு ஏது ஒருரூபாய்?''

''நேற்று நீங்கதானே தந்தீங்க.''

''அதைத் தையல் டீச்சரிட்டை கொடுக்கேல்லையா?''

''தையல் டீச்சர் நேற்று 'அப்சென்ற்'. இன்றைக்குத்தான் வருவா. குடுக்கலாமென்று தையல் பெட்டியிலே வைச்சிருந்தேன்...''

''இப்பொழுது காசுக்குக் கால்முளைச்சு நடந்து போயிற்றுதாக்கும்......''

''நேற்றுப்பின்னேரம் ரவி என்ரை தையல்பெட்டியை எடுத்துப் பாத்தான் ... நான் கண்டனுன்...''

''என்னடா ரவி?''

''இல்லையம்மா ... நான் அத்தாச்சீன்ர காசு எடுத்ததில்லை. அத்தாச்சி பொய் சொல்லுது...'' —ரவி குரலை உச்சஸ்தாயிக்கு எழுப்புகின்ருன்,

இன்னும் ஒருவார்த்தை கண்டிப்பாகப் பேசினுல், அவன் அடம்பிடித்தலின் உச்சியை அடைவான் என்பதுதான் அந்த ஸ்தாயியின் எச்சரிக்கை. அதைத் தீர்ப்பதற்கு அநுமாரும், அவர் உதவியுடன் பர்வதமலையும் நிச்சயந் தேவைப்படும். அது அம்மாவுக்குத் தெரியும்.

''தம்பி பொய்சொல்லமாட்டான். நீ தையல்பெட்டியை ஆட்டத்திலே எங்கேயாவது வைத்திருப்பாய். யாரோ ஒரு களவாணிப்பெட்டை அதைத்திருடியிருக்கின்றுள். நடந்தது அதுதான்...'' —பக்கத்தில் நின்று பார்த்தவளைப்போல ரேணுவின் அம்மா தீர்ப்பு வழங்குகிறுள்.

மேற்கொண்டுசதாசிவத்தாரால் படிப்பறையில்குந்தியிருக்கமுடியவில்லை. வெளியே வருகின்றுர்.

''ஒருரூபாவுக்காக ஏன் இவ்வளவு பெரிய இது? ... நம்முடைய அஜாக்கிரதையினுல் அது சாணுமற்போய் விட்டது. டீச்சருக்குப் புதிதாக ஒருரூபாய் கொடுத்தனுப்பினுல், விவகாரம் அவ்வளவில் முடிந்துவிடும்...'' எனச் சமரசத்திட்டமொன்றைச் சமர்ப்பிக்கின்றுர்.

''உங்களுக்கு மகாஅலெக்ஸாந்தரைப்பற்றியும் நெப்போலியனைப்பற்றியும் மணித்தியாலக்கணக்கிலை பேசத் தெரியும். அந்த அளவிலை வீட்டிலை நடக்கிறதோ, ஊரிலை நடக்கிறதோ தெரியாது ... ஸ்கூலுகளிலை இப்ப வரவரக் களவாணிக்கூட்டம் மெத்திப்போச்சுது ... இன்றைக்கு ஒருரூபாய்க்குக் கைநீளும் ... நாளைக்குப் பத்து ... ... எங்கடை இளக்காரந்தான் களவாணிப்பட்டாளத்தை உருவாக்கும்...'' -அவருடைய மனைவி கோடைமழையாட்டம் ஒருபிரசங்கமே பொழிந்து நிறுத்துகின்றுள்.

அவள் உதட்டுக்கும் உள்ளத்துக்கும் உள்ள உறவை சதாசிவத்தார் அறிவார். மனைவிக்கு இறுக்கமானகை. யாழ்ப்பாணத்துச் சிக்கனத்தின் அறுவடை; சதாசிவத்தார் இரக்கசுபாவத்தின் காரணமாகக் கல்லூரியில் சுற்றுநிருபங்களாக வலம்வரும் நன்கொடை 'லிஸ்டு'களில் தாராளமாக அள்ளிக்கொடுத்து, சம்பளத்தில் விழும் துண்டுகளுக்குப் பூரணவிளக்கம் கொடுக்கமுடியாது கைகளைப் பிசைந்து நிற்பது அவருடைய அநுபவம்.

வீரியன் பம்பரத்தை மணலிலே சுழலவிட்டு, அவர் படிப்பறைக்குள் மீளுகிறுர். 1818-ம் ஆண்டில் நடைபெற்ற ஊவாப்புரட்சியிலே பங்குபற்றிய கதாபாத்திரங்களைப்பற்றிய நினைவுகளில் மனத்தினைக் குவிக்கும் முயற்சி.

'இந்தாடீ, ரேணு! டீச்சரிட்டைச்சொல்லி, அந்தக்களவாணிப் பொடிச்சியைக் கண்டுபிடிச்சு நல்ல பூசை வாங்கிக்குடு. அப்பிடி அவளைக் கண்டுபிடிக் காட்டி, ஆனைப்பந்திப் பிள்ளையாரிட்டை நேத்திக்கடன் வைச்சிட்டுவா. அந்தக் களவாணிப் பெட்டையின்ரை கையை அழுகவைச்சு ஆண்டவன் காட்டுவான்..?'

அம்மா சுபாவமே அப்பிடித்தான். 'பழிகிடப்பது'. 'நேர்த்திக்கடன் வைப்பது', 'கைஅழுகும்', 'கண்ணவிஞ்சுபோகும்' என்று பல சொற்றொடர்கள் ஏக தேசமாக வந்துவிழும்.

சதாசிவத்தாரின் மனம் மேற்கொண்டும் சரித்திர பாத்திரங்களிலே ஒன்ற மறுத்தன. மனத்திலே சுளுக்கு. ஊர்பேர் தெரியாத உருவமே காணாத, ஆனாலும் குற்றஞ்சாட்டப்பட்டிருக்கும் அந்தச் களவாணிப் பெட்டையின்மீது அநுதாபமும் சுரக்கின்றது.

'ஊரார் பெற்றபிள்ளைகளை ஏன் கரித்துக்கொட்ட வேண்டும்? வேணுமட்டும் சற்று ஜாக்கிரதையாக இருந்திருந்தால் களவே போயிருக்காது அல்லவா? அத்துடன். நேர்த்திக்கடனை ஏற்று அதற்குப் பிரதியுபகாரமாகக் கையழுகப்பண்ணுவது ஆகிய சிரமங்களும் கடவுளுக்கு ஏற்காதிருக்குமல்லவா?''

மனைவியிடம் கேட்க சதாசிவத்தாரின் மனம் உன்னியது. அதனைக் கேட்டு வினையை விலைக்கு வாங்காது பேசாமல் இருந்துவிட்டார்.

என்னுடைய எண்ணங்கள் போக்குகள் என்ற மட்டத்திற்கு என் மனைவியால் உயரமுடியவில்லை. அஃது அவள் குற்றம்! என்றால் அவளுடைய மனோபக்குவ நிலைகளுக்கு இசைவாக இறங்கிவரமுடிவதில்லை அது என்குற்றமா? ஓடும் ஆறு ஓடிக்கொண்டே யிடுக்கட்டும்...

சமகால நிகழ்ச்சிகளைப்பற்றி அவர் அதிகம் அக்கறைப்படுவதில்லை அவை சரித்திர காலத்திற்குள் புகுந்த பிற்பாடுதான், சொந்த பந்தபாச உணர்ச்சிகளிலிருந்து அவற்றைப் பிரித்துவைத்து, சரித்திரநியதியான பெறுபேறுசளைக் கற்பித்தல் சாத்தியமானது என்பதே அவருடைய அறிவுவாதம்.

அறிவு வயலிலே உணர்ச்சிப் பசு மேய்கின்றது!

# இன்னெரு பொறி

கைத்தடியை எடுத்துக்கொண்டு திரும்புகிருர் 'சதா சிவத்தார். அவருடைய வழியை மறிப்பவனைப்போல ரவி எதிரில் வந்து நிற்கின்ருன். குறும்புத்தனம் விழிகளில் ஒழுக, அந்த விழிகளே முகம் முழுவதையும் அடைத்திருப்பதான அபூர்வக்கலே.

''அப்பா தாசு ஐஞ்சு. நான் ததமாத்தன்...''

குதலே உச்சரிப்பில் டகரங்களையும், ககரங்களையும் தகரங்களாக மாற்றுவது எப்படி அவன் ஏகமோ அப்படி எண்களில் அதிக மதிப்புப்பெற்றது ஐந்துதான் என்பது அவன் நம்பிக்கை.

''ரவி, நீங்கள் யாருடைய தங்கப்பவுண்?''

''நான் அப்பான்த தந்தப்பவுன்...''

''அப்ப, அப்பாவுக்கு மகன் காசு காட்டுவான்!''

சங்காகக் குவிந்துகிடக்கும் பாற்கையை விரித்துக் காட்டுகிருன். சிறுகைப்பீடத்தில் ஒரு ரூபாய் நாணயம்.

''தம்பிக்கு ஏது இந்தக்காசு?''

''அப்பா கீத போத்த... நான் எதுத்த...''

எந்தக் காசைப் பொறுக்கி எடுத்தாலும், அது அப்பாவின் காசு என்பது ரவியின் கட்சி. படிப்பறைக்குள் மனைவியோ, ரேணுவோ வருவது அபூர்வம். மேஜையின்மீது விரிந்துகிடக்கும் நூல்களெல்லாம் பயங்கரவனம் என்றும், அவற்றினூடே அலேந்து திரியும் சிங்கம் இந்தச் சதாசிவத்தார் என்றும் அவர்களின் நினைவுகள். ரவி மட்டும் அந்த வனத்தில் அணில் குஞ்சுபோன்று சுதந்திரமாகத் துள்ளித் திரிவான். புத்தகங்களை விளையாட்டுப் பொருள்களாக்கி கண்ட இடங்களிலும் இறைத்து வைப்பான். இதற்காக ரவியைச் சில சமயங்களில் சினப்பதும் உண்டு; அரிதாகக் கண்டிப்பதும் உண்டு. 'ஏண்டா ரவி! அந்தத் துருவாசர் குடியிருக்கிற அறைக்குள் நீ போனுய்?' என்று ரவியைக்கண்டிப்பதுபோல மனைவியின் சீற்றம்

என்மீது திரும்புவதுமுண்டு. இத்தனைக்கும் ரவி தன் போக்கில் மன்னன்

''அப்பா காசை அப்பாவிடம் மகன் தருவான்...'' எனச் சதாசிவத்தார் தன் கையை நீட்டுகின்றார்.

''மாத்தன்... முத்தா சு தாங்க... தாசு தாறன்.''

''கடைக்குப் போய் மகனுக்கு நிறைய முட்டாசு வாங்கிக்கொண்டு அப்பா வருவார்...''

ரவி எல்லாவற்றையும் விளங்கிக்கொண்டவனைப் போல, 'களுக்'கென்று சிரித்து, அந்த ஒரு ரூபாய் நாணயத்தை அப்பா கையிலே வைக்கிறான்.

அவனை அள்ளி அணைத்து அவனுடைய குருத்துக் கன்னங்களிலே முத்தமிட்டு அவர் வெளியே நடக்கத் தொடங்குகின்றார்.

சாயங்கால வேளைகளில், பொதுநூல் நிலையத்திற்குச் சென்று, அன்றைக்கு வந்திருக்கும் புதினப் பத்திரிகைகளையெல்லாம் வெள்ளாடு மேச்சல்போட்டபின்னர் வாவிக்கரையில் சத்தான காற்று 'வாங்கும்' திருப்தியுடன் உலவுவார். அப்படிச்செய்வதினால் முன்னேறி வரும் உலகத்துடன் தானும் சேர்ந்து முன்னேறி வருவதான எண்ணத்தின் நிறைவு.

வாவிக்கரையில், விழிகளை நிலத்திலே புதைத்து கற்பனைக்கு எதேச்சையான சுதந்திரம் அளித்து, நடந்துகொண்டிருந்த சதாசிவத்தாரை 'குட் ஈவினிங்' என்ற குரல் தடுத்து நிறுத்துகின்றது.

நிமிர்ந்து பார்க்கின்றார். எதிரில் வித்துவான் நடராசா பல்லெல்லாம் வாயாக நிற்கின்றார். இருவரும் பால்யத்திலிருந்து நெருக்கமான நண்பர்கள்.

''தங்களை வீட்டில் வந்து பார்க்கலாம் என்றிருந்தேன்.. எதிர்பாராதவிதமாக...''

''பீடிகை இருக்கட்டும்...என்ன விசேஷம்?''

''வந்து...நம்ம பகுதியிலுள்ள கண்ணகி அம்மன் வழிபாட்டினுடைய வரலாற்றைப் பற்றி நூல் ஒன்று எழுதியுள்ளேன். இப்பகுதி கண்டி ராஜ்யத்தின் ஒரு பகுதியாக இருந்த காலத்தைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளும் அதில் வருகின்றன. காலவரையறைகள் சரியாக இருக்கின்றனவா என்பதை ஒரு தடவை சரி பார்த்துத் தந்தீர்களானால்...''

''அவ்வளவுதானே? நாளை மறுநாள் காலையில் வாருங்கள். ஒன்ருக அமர்ந்து சரி பார்த்து விடலாம்...''

''நன்றி...''

பேசியபடி ஹோட்டலுக்கு முன்னுல் வந்துவிடுகின்ருர்கள்.

''வாருங்கள்! தேநீர் அருந்திச் செல்லலாம்...'' எனச் சதாசிவத்தார் அழைக்கின்ருர்.

''வேண்டாம்...''

''ஏன் தேநீருக்குக்கூட இடமில்லாமல் மத்தியானச் சாப்பாட்டை வயிற்றுள் போட்டு நிரப்பிவைத்திருக்கின்றீர்களா?'' எனக் கேட்டுச் சதாசிவத்தார் கடகடத்துச் சிரிக்கின்ருர்.

சிற்றுண்டிக்கும் தேநீருக்குமிடையில் பல கதைகள் தொட்டந்தொட்டமாக உருட்டப்படுகின்றன. பழைய மதுவைப்போன்று, பழைய நினைவுகளும் போதையூட்ட வல்லன என்ற அநுபவம் இருவருக்கும்.

பில் வருகின்றது...ரவி கொடுத்த ஒரு ரூபாய் நாணயத்தில் எண்பத்தைந்து சதங்கள் கரைகின்றன. மிச்சம் பதினைந்து சதங்களும் ரவிக்கு உவப்பான மிட்டாய்களாக மாறுகின்றன.

கையும் கணக்கும் சரி!

## பிறிதொரு பொறி

மனத்திலே சோகக்கேவலின் கீறல். அதன் ரிஷி மூலத்தை அறியும் முயற்சியில் சதாசிவத்தார் சலித்துப் போகின்ருர். நேரத்தைப் போக்குவதற்காகப்படிப்பறையிலே ஒட்டிக்கிடப்பதற்கும் அலுப்பு. பஸ் நிலையத்தை நோக்கிய விசுக்குப் பயணம்

பஸ் நிலையம். பஸ் ஒன்று புறப்பட ஆயத்தமாக இருக்கின்றது. 'இதில் ஏறுவோமா? வேண்டாமா? என மனத் 'தளம்பல்!'

பஸ்ஸிலே தொற்றிக் கொள்கின்றார். இருப்பதற்கு இடமில்லை. அவரைக் கண்டதும் இரண்டொருவர் எழுந்து, "சேர்! இதில் இருங்கோ..." என மரியாதை செய்கின்றார்கள். தன்னுடைய பெருமையை நிலைநாட்டுவதற்காக மற்றவர்களுடைய உரிமைச் சௌகரியத்தை அபகரிக்க மனம் ஒப்பவில்லை. எனவே, அவற்றை மறுத்து, 'வௌவால் தொங்க'லில் சுகம் அனுபவிக்கும் பயணம்.

'டிக்கட்' பெற்றதும், இரண்டு ரூபாய் நோட்டைக் கொடுக்கின்றார். இதே நேரத்தில், வாரின் பிடியிலே நிலைகுத்திய சமநிலை வழுவுகின்றது. அதனைச் சமாளித்துக் கொண்டே அகப்பட்ட இடத்திற்குள் சில்லறைகளைப் போடுகின்றார்.

அந்த சில்லறைகள் ஒழுகி, பஸ்ஸிற்குள் விழுகின்றன! 'சதாசிவம் சேரின்' சில்லறைகளைப் பொறுக்கிக் கொடுக்கும் எத்தனத்தில் பலருடைய கைகள் பஸ்ஸின் தளத்தில் நீந்துகின்றன.

முகையாக இருந்த ஞானம் விரிகின்றது...

கடந்த இரண்டு நாட்களாக அவர் அணிந்து பவனி வரும் காற்சட்டையின் இடப்பக்கட்டில் ஒரு ரூபாய் நாணயம் வழுவிவிடக்கூடிய அளவுக்கு ஓட்டை. அதற்குள் கைக்குட்டை மட்டுந்தான் வைப்பது என்று பிரக்ஞைபூர்வமாகப் பிரதிக்ஞை எடுத்துள்ள போதிலும், ஞாபகமறதி ஏற்படவே செய்கின்றது. விளைவு இத்தகைய தடுமாற்றங்கள்.

ஞானவழிபாட்டில் பிறிதொரு கிளை!

## மேலுமொருபொறி

சதாசிவத்திற்கு வேப்பெண்ணெய் விவகாரங்களுள் ஒன்று கணிதம். பாடசாலை மாணக்கராக இருந்த நாட்கள்தொட்டே கைமுனு 'எல்லாளன்மீது படையெடுத்த ஆண்டு, அசோகன் கலிங்கத்துப்போர் நடத்திய ஆண்டு, முஹம்மது நபி ஹிஜ்ரி யாத்திரைபோன ஆண்டு, நோர்மன் இனத்தார் பிரித்தானியாவைக் கைப்பற்றிய ஆண்டு, பைஸாந்தியம் சாம்ராஜ்யத்தின்

கோநகரான கொன்ஸ்தாந்திநோபின் இஸ்லாமியர் வசமான ஆண்டு, வஸ்கொடிகாமா கள்ளிக்கோட்டைக் கரையையும், கொலம்பஸ் அமெரிக்கக்கரையையும் அடைந்த ஆண்டுகள் என ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத ஆண்டுகளை அவர் 'டக் டக்' கென்று ஒப்புவிப்பார்.

ஆனால், 'இன்றுகூட 'இரண்டை இரண்டாற் பெருக்கி, இரண்டால் வகுத்து இரண்டைக்கூட்டி, இரண்டைக் கழித்தால் என்னவிடை?' என்று கேட்டால், இரண்டு தாள்களையும், அரை மணி நேரத்தையும் செலவு செய்தபின்னர், 'இதோ தாள்கள் இருக்கின்றன. ஏதாவது விடை வரத்தான்செய்யும். நீங்களே போட்டுப் பார்த்துக்கொள்ளுங்கள்...' என்பர் சற்றும் கூச்சப்படாமல்.

மனைவி என்ற பெயரில் ஒருத்தி அவர் வாழ்க்கையில் புகுந்து, ரூபாய் சதங்கள் என்று எண்ணிக் கணக்கு வைக்கத்தொடங்கிவிட்டால் அவளுடைய 'பிசினி'ப் போக்குக்குச் சில சமயங்களில் எரிச்சலை ஊட்டினாலும், கணக்குவைத்துக்கொள்ளும் சனியன் தொல்லையிலிருந்து விடுதலை பெற்றுவிட்டதான திருப்தி பல தடவைகளில் ஏற்பட்டிருக்கின்றது.

காலையில், அந்த ஊர் பேர் தெரியாத, உருவமே காணாத, ஆனாலும் குற்றஞ் சாட்டப்பட்டிருக்கும் அந்தக் களவாணிப் பெட்டையின்மீது கசிந்த அனுதாபம் காரணமாகக் கணக்கிலே புதிய அக்கறை தோன்றி மனத்தினை அலைக்கழிக்கின்றது.

இன்று மூன்றாவதுநாள் பயணம். அந்த வாரத்திற்கான பயணச் செலவாக ஐந்து ரூபாய்கள் முந்தாநாள் தரப்பட்டன. தேநீர், சிற்றுண்டி வகையறுக்கள் 'கண்டீன்' கணக்கில் நடராசாவைப் பார்ப்பதற்கு முன்னர், நண்பர்கள் என்ற கோதாவில் விருந்தாளிகள் தட்டுப்படவுமில்லை. எனவே, எந்தக் கணக்கின்படியும் ஒரு ரூபாய் சொச்சந்தான் செலவாகியிருக்கமுடியும். மிச்சம் மூன்று ரூபாய்களும்...

ஒரு ரூபாய் நாணயத்தை இடப் பக்கட்டிற்குள் கை தவறிப்போட, அது ஓட்டையின் மூலம் தொலைந்து போக... ரவி மூலம், ரேணுவின் தையல் பெட்டியிலே கிடந்த பணம் என் கணக்கில் சேர்ந்ததா?

கள்ளன் ரவியா? அன்றேல் நான்...

ஊர் பேர் தெரியாத, உருவமே காணாத, ஆனாலும், குற்றஞ்சாட்டப்பட்டிருக்கும் அந்தக் களவாணிப் பெட்டையைப்பற்றிய நினைவுகள்...

''வந்தாறுமூலை சென்றல் கொலிச்...சேர் இறங்கவில்லையா?''—கொண்டக்டரின் குரல்.

நன்றி தெரிவிக்கும் பாவனையும், அசட்டுத்தனமும் இணைந்து கலக்கும் பாங்கிலே அவர் முறுவலிக்கிறார்.

## வேறொரு பொறி

''ரேணு! தையல் டீச்சர் வந்தாவா?''

''வந்தா.''

''ரூபாய் களவுபோனதைப்பற்றிச் சொன்னீரா?''

''சொன்னனான்...''

''என்ன நடந்தது?''

''பிள்ளையளை விசாரித்தா... ஒருத்தரும் எடுக்கேல்லையாம். நான்தான் வழியில் எங்கேயாவது தொலைத்திருப்பேன் என்று டீச்சர் சொல்லுகிறா......''

''அது எப்பிடியடி வழியிலே தொலையும்...?தையல் பெட்டியிலே ஓட்டையா? ரூபாய்களுக்கு கால்முளைச்சதா? கேட்டியாடீ, டீச்சரை?''

''கேட்டா அடிப்பா...''

''அவ நொட்டத்தான் இருக்குது...நாளைக்கு ஐந்து சதம்தாறன். பிள்ளையாரின்ரை உண்டியலிலை, 'அந்தக் களவாணிப் பெட்டையைக்காட்டு' எண்டு நேந்துபோட்டுட்டு வா. நானும் முடிச்சிலை காசுகட்டி வைக்கிறன். ஒரு கிழமையிலை கள்ளி யார் எண்டு தெரியுதோ இல்லையோ பாப்பம்...''

''சரி, அம்மா...''

ரேணுவின் ரூபாய் அகப்படவில்லை. அப்படியாயின், அப்பணம் என் கணக்கில் சேர்ந்திருக்கலாம். நாளைக்குக் காலையில் தேவாரம் முடிந்ததும், அவளிடம் ஒரு ரூபாயைக் கொடுத்து விவகாரத்தை முடித்துக்கொள்ளுவதுதான் புத்தி.

தீர்மானத்திற்கு வந்த பின்னர், நேற்றையப்

போலவே, இன்றும் கைத்தடியுடன் உலாத்தலுக்குப் புறப்படுகின்றார்.

எந்த முடிவுக்கு.வந்தாலும், ஊர்பேர் தெரியாத, உருவமே காணாத, ஆனாலும் குற்றஞ் சாட்டப்பட்டிருக்கும் அந்தக் களவாணிப் பெட்டையின்மீது சுரந்து கொண்டிருக்கும் அனுதாபம்...

## மீண்டுமொரு பொறி

'பித்தாப் பிறைசூடி பெருமானே அருளாளா...'

பக்தியின் புதுப்புனலிலே தோய்த்தெடுக்கப்பட்ட பிஞ்சுக்குரல் பூஜையறையிலிருந்து மிதந்துவருகின்றது.

ஒரு ரூபாய் நாணயம் அந்த இடத்தில் அப்படியே வைக்கப்பட்டிருக்கின்றது.

ரேணு ஸ்கூலுக்குப் போகும்பொழுது அதனைக் கொடுத்து, ரவிமூலம் நான் அவளுடைய பணத்தைத் 'திருடியதாக'ப் புழுகிவைக்கவேண்டும்.

புழுகுதல் சமன் பொய்யா?

வாய்மையின் இடத்தில் வைக்கப்படும் பொய்மை எது?

1818-ம் ஆண்டில் நடைபெற்ற ஊவாப் புரட்சியிலே பங்குபற்றிய கதாபாத்திரங்களுடன் சதாசிவத்தாரின் மனம் ஒன்றுகின்றது.

மேல்காற்று சுண்டி இழுத்ததா? நூல் நைந்து அறுந்ததா?

''அப்பா...அப்பா'' எனக் குரல் எழுப்பியபடி ரவி படிப்பறைக்குள் நுழைகின்றான்.

''என்னடா ரவி?''

''மாமா ஒதுத்தர் அப்பாவைப் பாத்து வந்தார்...''

''யாராக இருக்கும்?'' என்ற வினாக்குறியை முகத்திலே அப்பிக்கொண்டு சதாசிவத்தார் ஹோலுக்கு வருகின்றார்.

'அப்பொயின்மெண்ட்' பிசகாது வித்துவான் நடராஜா வந்து நிற்கின்றார்.

''வாருங்கள்...என்னுடைய படிப்பறைதான் வசதியான இடம்...ரவி, அம்மாவிடம் சொல்லுங்கோ, இந்த

மாமாவுக்குத் தேநீர் கொண்டுவரச் சொல்...லி''

''தேத்தாவா?''

''ஓம்...''

ரவி அடுக்களைப்பக்கம் துள்ளி ஓடுகின்றான்.

சதாசிவத்தாரும் நண்பரும் படிப்பறைக்குள் நுழைகின்றார்கள்.

வித்துவ உலகம் ஒன்று படிப்பறைக்குள் விரிகின்றது. நேர ஓட்டத்தின் பிரக்ஞை இற்றுவிடுகின்றது.

## ஓர் உதிரிப் பொறி

சரித்திரம் என்பது கிளிப்பிள்ளை வாக்கில் பரம்பும் பாடமல்ல. அது ஜீவத்துடிப்புள்ளது. இதன் காரணமாகத்தான், எதிர்காலத்திற்கும் நிகழ்காலத்திற்குமிடையில் நியாயபூர்வமான வளர்ச்சியை அது கற்பிக்கின்றது. இதனை மறந்து சரித்திர உண்மைகளைச் சிறு சிறு அரசியல் ஆதாயங்களுக்காகத் திரித்துப் பேசுபவர்கள் சமுதாய விரோதிகள்—தேசத்துரோகிகள். அவர்களுக்கு ஏற்ற தண்டனை தூக்குமேடையே.

சதாசிவத்தார், பல்கலைக்கழகப் புதுமுக வகுப்பின் விரிவுரைகளுடன் ஒன்றுகின்றார்.

''இலங்கையின் தனித்துவமான பாரம்பரியத்தையும், கலாசாரச்செல்வங்களையும் கட்டிவளர்த்ததிலும், பாதுகாத்ததிலும் தமிழர்களுடைய பங்களிப்பு மகத்தானதாகும்...தனிச்சிங்கள இரத்தத்தின் இன்றைய சிரேஷ்டவாரிசுகளாகத் திகழ்பவர்கள், தன் மூதாதையர் கிறிஸ்தவ மதத்தைத் தழுவியபிறகும், சுதேசியப் பண்பாட்டினை நிலைநாட்டத் தமிழ்மன்னர்கள் உழைத்தார்கள். கீர்த்தி ஸ்ரீ ராஜசிங்கன் இனத்தால் தமிழன்; மதத்தால் சைவன். ஆனாலும், அவனுடைய காலத்திலே, அவனுடைய ஆதரவுடன் பௌத்த சமயத்தின் புனருத்தாரண வேலைகள் மேற்கொள்ளப்பட்டன. இந்நாட்டின் வைதீக பௌத்தத்தைப் பாதுகாப்பதாக நம்பப்படும் மல்வத்தை பௌத்த பீடத்தைத்தோற்றுவிக்கக் கால்கோளாக விளங்கியவனும் அவனே. சுயநயங்களை மட்டுமே கருதி, சிங்களப்பிரதானிகள் கண்டி நாட்டின் சுதந்திரத்தை ஆங்கிலேயர்களுக்குக் கையளிக்கப் பேரம்பேசிக் கொண்டிருந்தபொழுது, சிங்கக்

கொடியின் சுதந்திரத்தைப் பாதுகாக்க இறுதிவரை போராடிய ஸ்ரீ விக்கிரம ராஜசிங்கனும் ஒரு தமிழன். கண்டி நாடு ஆங்கிலேயர் வசமாகிய பின்னரும், மூன்று நூற்றாண்டு காலமாக அந்நியருக்கு எதிராகக் கட்டி வளர்க்கப்பட்ட சுதந்திரதாகம் தணியவில்லை. இதனால் 1818-ஆம் ஆண்டில் ஊவாச் சுதந்திரப்போர் வெடித்துக் கிளம்பியது. கெப்பிட்டிப்பொலவும் பங்கெடுத்த அப்புரட்சிக்கு விலபாவே தலைமை தாங்கினான். அவனும் ஒரு தமிழனே...''

விரிவுரையை இடையிற் பிளந்து, கல்லூரி 'பியூன்' வகுப்பறையில் நுழைகின்றான். அதிபரின் குறிப்பு ஒன்று கைமாறுகின்றது.

அதைப் பிரித்துக்கூடப் பார்க்காது, சதாசிவத்தார் தொடர்ந்து வகுப்பினை நடத்துகின்றார்.

மணி அடிக்கின்றது; பாடம் முடிவடைகின்றது; அதிபர் அனுப்பிய குறிப்பினைப் பற்றிய பிரக்ஞை முளைக்கின்றது.

அதனைப் பிரித்துப் பார்க்கின்றார்.

சீதையை விழுங்க பூமி பிளந்ததுபோல, அவரையும் விழுங்கப் பூமி பிளப்பதான அதிர்ச்சி!

அக்குறிப்பினை மீண்டும் ஒரு தடவை அவரால் வாசிக்கமுடியவில்லை. கண்களில் தேங்கிய கண்ணீர்த் துளிகள் அவருடைய பார்க்குஞ் சக்தியைக்குருடாக்கின.

அழுகை என்ற பலவீனத்திற்குள் அவர் தன்னை முற்றாக ஒப்புக்கொடுக்கின்றார்.

## பின்னும் ஒரு பொறி

ரேணு! நீ இறந்து விட்டாயா? காவோலைகள்தான் பழுத்துவிழும். நீ பச்சைக் குருத்தடி!

ஆனைப்பந்திப்பிள்ளையாரின் பகற்பூஜைக்குச்சென்று, உன் அம்மாவின் தூண்டுதலின் பேரில், ஊர் பேர் தெரியாத, உருவமே காணாத, ஆனாலும் குற்றஞ்சாட்டப் பட்டிருக்கும் அந்தக் களவாணிப் பெட்டையின் கை அழுகவேண்டும் என்று பிரார்த்தனை செலுத்த உன் பிஞ்சுமனம் இடம் கொடுத்ததா?

தையல் டீச்சரிடம் கொடுக்க வேண்டிய ஒரு ரூபாய் நாணயத்தை காலையிலேயே எடுத்து வைத்திருந்

தேனே...அதனை உன்னிடம் தரக்கூடாது என்று தடுப்பதற்காக, காலன், நடராஜா என்ற உருவில் என் அறைக்குள் நுழைந்தானு?

ஸ்கூலில் வைத்துவிட்டு வந்திருந்த புத்தகங்களை இன்றொரு களவாணிப் பெட்டை எடுத்துவிடக்கூடு மென்ற அச்சத்தினுலா, எதிரே வந்த 'லாறி'யையும் சட்டை செய்யாது, வீதியிலே பாய்ந்தாய்?

என் ரேணுக்குஞ்சு! லாறியின் சக்கரங்களுக்கிடையில் நீ மரணவஸ்தைப்பட்ட அந்தக்கணம்...

அதிகாலையில், பக்தியின் புதுப்புனலிலே தோய்த் தெடுக்கப்பட்ட பிஞ்சுக்குரலிலே தேவாரம் பாடுவாயே! அதைக்கேட்டின்புற்ற கடவுளின் உள்ளத்தில், இந்தப் பிஞ்சுவயதில் உன்னைப் பறித்துக் கொள்ள வேண்டுமென்ற கொடூரம் எப்படி விளைந்தது?

உன்னை எங்கே சந்தித்து என் சந்தேக வினுக்களுக்கான விடைகளைப் பெறுவேன்? உன் கணக்குப் புத்தகத்தின் பக்கங்களுக்கிடையில் ஒரு ரூபாய் நாணயம் கண்டெடுக்கப்பட்டதே! என்னைப்போன்று நீயும் ஞாபகமறதியாகப் பணத்தை அங்கு வைத்துவிட்டு, இரண்டு நாட்களும் தையல்பெட்டியிலேயே தேடிப் பார்த்தாயா? ஊர்பேர் தெரியாத, உருவமே காணுத ஆனுலும் குற்றஞ் சாட்டப்பட்ட அந்தக் களவாணிப் பெட்டையின் கை அழுகவே இல்லை. அந்த அரூபி உன் அம்மாவைப் பார்த்து நகைத்துக் கொண்டிருக்கின்றுளா?

இல்லாவிட்டால், கடந்த ஐந்து ஆண்டுகளாக உன் அம்மாவின் உள்ளம் ஏன் அணுஅணுவாகச் சாம்பி அழுகிக்கொண்டிருக்கின்றது?

அதோ, பக்திமுற்றி பாவத்தில் அவள் தேவாரம் பாடுகின்றுள். பாடவில்லை; அழுகின்றுள். ஓயாத நீண்ட அழுகுரல்....

## .... பொறி

**'அத்தா உனக்காளாயினி அல்லேன் எனலாமே...'**

பூஜையறையிலே இருந்துவரும் குரலில் சோகம் முற்றுகக் கனிகின்றது.

படிப்பறையிலிருக்கும் சதாசிவத்தார் கண்களில்

பனித்துளும்பல். அதனைத் தடுக்கும் முயற்சியில், பார்வையை யன்னலுக்கு வெளியே தூக்கி எறிகின்றார்.

தனிக்கிளையைத் தவிசாகப்பெற்ற ரோஜா, யௌவனப் பூரிப்பின் மலர்ச்சி காட்டுகின்றது.

''ரவி! இங்க வாருங்கோ ... ... அம்மாவோட கூடத் தேவாரம் பாடுங்கோ ...''

''அம்மா, எல்லோருக்குமாகச் சேர்த்து நீங்கள் பாடினுல் போதும் ......'' என்கின்றான் ரவி. ஐந்தாம் தமிழ்மலர்ப் புத்தகத்தின் பக்கங்களைப் புரட்டிய வண்ணம்.

''நான் பாடிக்கொண்டேயிருக்கின்றேன் ... ... கடந்த அஞ்சு ஆண்டுகளாக எல்லோருக்குமாகச் சேர்த்துத்தான் பாடிக்கொண்டே இருக்கிறேனேயடா ...இந்த வீடுசிரிக்க ஒரு பெண்குழந்தை வந்து இந்த வயிற்றிலே பூக்கமாட்டேன் என்கிறதேயடா...''

ஆவேசத்தில் வெட்கமும் இற்றுவிடுகின்றது.

பூஜையறையில் விம்மல் சத்தம் கேட்கின்றது.

அக்குரல் சதாசிவத்தாரின் குழலட்டையைத் திடநிலைக்குக் கொண்டுவருவதைப்போல ...

''ரவி! இண்டைக்கு ஆடிச்செவ்வாய் ... ... நான் விரதம் ... எனக்காக ஒருதடவை வந்துபாருடா மகனே! ... ...''- கெஞ்சலிலே விம்மல் முட்டுகின்றது.

ஒருரூபாய் நாணயம், அந்த இடத்தில், அப்படியே இருக்கின்றது.

மடயே! இன்றைக்கு ஆடிச்செவ்வாய் விரதமா? நீ எப்படித்தான் முறையிட்டாலும், நோன்பிருந்தாலும், ஓர் இரகசியத்தை மட்டும் கடவுள் உன்னிடம் சொல்லவே மாட்டார்.

ரவி பிறந்தபிற்பாடு, தென்னிந்தியக் கல்வெட்டுக்களைப்பற்றி ஆராய்வுகள் நடத்த இந்தியாவில் ஓராண்டு காலம் வாழ்ந்தேனல்லவா? அப்பொழுது ... நான்கார்விபத்தின்வாய்ப்பட்டதையும், அதன் காரணமாக ஆண்மை இழந்து போனதையும்...... இவற்றை நினைத்துப் பார்க்கவே என் மனம் கூசும் பொழுது, உன்னிடம் சொல்ல எப்படி நா உன்னும்.

'சிறையாடும் மடக்கிளியே இங்கேவா,
தேனொடுபால் உணத்தருவேன்...'

பூஜையறையிலிருந்து இன்னொருதேவாரம், பக்தியின் முற்றிய பாவத்துடன் பரம்புகின்றது. அத்துடன் ரவியின் பிஞ்சுக்குரலும் நேர்த்தியாக இழைகின்றது.

(முற்றும்)

# சுண்டு விரல் மெட்டி

வசந்தத்தின் எக்காளம் தடாகத்தின் பூரிப்பிலிருந்து தெரிகிறது. மலர்ந்துள்ள தாமரைகளின் கிளர்ச்சிதரும் நறுமணம் நெஞ்செலாம் செறிகிறது. இலைகளின் முத்துக்களில் நட்சத்திரங்கள் சிரிக்கின்றன. அது கோவில் தடாகம். பாற்கடலிற் திரண்டு வந்த வெண்ணெய்க்கட்டியாக அதில் வாத்தொன்று மிதக்கிறது. சுற்றிலும் மருத மரங்கள் மதாளித்து இருக்கின்றன. வில்வமரமொன்று ஓங்கி நிற்கிறது. சம்மணம் கூட்டித்தவமியற்றும் முனிபுங்கவரைப்போல மத்தியில் கம்பீரமாக வீற்றிருக்கிறது, சிவனின் ஆலயம். அந்தப் பிரதேசமெங்கும் பரவுவதற்காகத் தன் ஞான ஒளிப் பேழையைப் பிரமன் கவிழ்த்துவிட்டதைப்போல வானத்துக்கும் பூமிக்குமாக சரேலென ஓடி ஒளி பாலிக்கிறது, வானவில்தாரை. அருமருந்தான பொழுது. ஒடுவனை உள்ளும், புறமுமாக உந்திவிடக்கூடியஇத்தனை ஜீவகளைமிக்க அந்த க்ஷணப்பித்தநேரத்தில் தன்னைப் பிரித்துக்கொண்டு குளக்கரைப்பாறையில் அமர்ந்திருக்கிறான், நடேசன். அவனுக்கு உள்ளேயும் சரி, வெளியேயும் சரி எதுவுமே இல்லை என்பதைப்போல அவன் அப்படியிருக்கிறான்.

சிவன்கோவிலின் மணிநாதவெள்ளம் 'ஹே! ஆத்மாவே, பகலிலிருந்தும், இரவிலிருந்தும் பிரிந்து தனித்து நிற்கும் இந்த ஏகாந்த வேளையில் இதோ என்னைப்பார்' என்பதைப் போலக் கணீரிடுகிறது. அவன் புல்லரித்து உடம்பைச் சிலிர்த்துக்கொள்கிறான். இந்தக் காற்றும் நீரும் இருப்பதைப்போலவே ஏதோ ஒன்று அவனுள்ளே ஓடி இதயத்தில் மோதுகிறது.

கோவில் சந்நிதியில் கூட்டம் பெருகுகின்றது. காஷாயத்துண்டுகள்-அர்ச்சனைத்தட்டங்கள் -குங்குமச் சரைகள்-பூச்சரங்கள். சற்று நேரத்துக்கு முன்பிருந்த இயற்கைக்கோலம் ஒருசேரப்பிணைந்த ஆண்டவத்தாண்டவத்தின் அற்புதக்கற்பனையான பெண்கள். மானுடத்துக்குச் சவாலாகிவிட்ட பாரிஜாதங்கள்.

நடேசன் ஒவ்வொருவராகப் பார்த்துக்கொண்டிருக்கின்றான். அவனிதயத்துக்குள்ளே ஓடித்திரிந்த 'அது' ஆத்மாவுக்குள்ளே போக மறுத்து மூளைக்குள்ளே ஓடி சரண்புகுந்து கொள்கிறது.

தம்மிடம் கவரப்படுவதற்காகத் தாழம் பூக்கள் சுகந்த மணத்தைக் காற்றிலே தூவுவதைப்போல கிண்கிணிக் குரல்கள் காற்றிலே மிதக்கின்றன.

நடேசன் திரும்புகிறான்.

அவனின் பார்வை அந்தப் பெண்களிடம் போகின்றது. அந்தப்பார்வைதான் பூனையின் நாக்கைப் போல எவ்வளவு சொரசொரப்பாயிருக்கிறது. நடேசனின் கண்கள் அந்தப் பெண்களின் ஆடைகளைச் சரேல் சரேலென உரிந்துவிடுகின்றன. நுங்கும் நுரையுமான அலைகளின் மீது காம்புகளைக்குத்தி, அந்த இதழ்களையே ஓடங்களாக்கிச் சிரித்துச்சிரித்து மிதந்துவரும் செவ்வரத்தம்பூந்தாதுகளைப்போல அந்தப் பாவையர் வருகின்றனர். பூக்களின் வாசம்கூட பூரிக்கின்ற வேளைதான்

சரித்திரகால சிற்பங்கள் இப்படித்தான் இருக்கின்றனவா? சிகிரியாவின் சித்திரக் கோலங்களா?- உருவங்கள், உறுப்புக்கள், உணர்வுகள், உயிர்கள்...அழகுகள்.

ஆத்மாவினின்றும் பிறக்கும் உணர்வு, உடலினின்றும் பிறக்கும் உணர்ச்சி, இரண்டுமே பிறந்ததற்காக அழகு.

நடேசன் மீண்டும் அந்தப் பெண்களை அதே கோலத்திலாக்கிப் பார்க்கின்ருன்.

கோபாலனும் காந்தனும் எங்கேதான் போய்விட்டார்கள்? வெள்ளிக்கிழமையிலுமா தாமதிப்பது? இருந்திருந்தால் வாய்விட்டுப் பேசி ரஸிக்கலாமே.

காந்தன் நடேசனின் கல்லூரி நண்பன். சினிமாப் பத்திரிகைகளிலிருந்து மாணவியர்வரை விமர்சிக்க வல்ல நண்பன். பிரின்சிப்பல் ஏசினுலும் கேட்டுக்கொண்டிருந்துவிட்டு வெளியே வந்தவுடன் 'இயற்கையை ரசிக்கத் தெரியாவிட்டால் கலைஞர்களாக மட்டுமல்ல மனிதர்களாகவே இருக்க முடியாது' என்று உற்சாகப்படுத்துபவன்.

ஒருநாள் அப்படித்தான் வகுப்பில் எலிசாவின் பக்கவாட்டு அழகை மெய்ம்மறந்து ரஸித்துக்கொண்டிருந்த காந்தன் ஏதோ சொன்ஞன். செக்ஸியாகத்தான் சொல்லிவிட்டான். தற்செயலாக வந்துவிட்ட ஆசிரியர் இருவரையும் தனியாக அழைத்துப் புத்திமதி சொன்ஞர், கடைசியில் 'உணர்ச்சிகள் தவருனவை என்று நான் சொல்லமாட்டேன். ஆஞல் மாணவர்களின் மூளை பலமுள்ளனவாயிருக்கவேண்டும். இல்லாவிட்டால் அவர்களின் லக்ஷியங்கள் துர்ப்பலமானவையாகிவிடும்' என்ருர். அதற்கு நடேசனும் சிரித்துக்கொண்டே 'சார் எங்களின் மூளைக்குச் சுதந்திரம் இருப்பதைப்போலவே உணர்ச்சிகளுக்கும் சுதந்திரம் இருந்தால்தான் பாடங்களே மூளையிற் பதிகின்றன' என்ருனே அவர் அவர்களைத் திட்டித் தீர்த்துவிடவில்லை. தர்க்கபலமுள்ள அவர்களின் கருத்துக்களை என்னசெய்வது?—

தோளிற் தட்டிவிட்டு எதிரே நிற்கிருன் கோபால். —"எங்கே காந்தனைக் காணேம். அங்கேபார் வெசாக் கூடுகளை. ஏன் இவ்வளவுநேரம்?" நடேசன் வெசாக் கூடு என்பது பெண்களைத்தான். அவர்கள் வண்ண வண்ண ஆடைகளணிவதால் அந்தப்பெயர்.

"மச்சான் ரமணியைக் கண்டேன்டா! நான் வரும்போது அவள் பஸ்ஸுக்கு நிற்கிரு. அன்றைக்குத் தியேட்டரில் கண்டோமே அதே 'டைட் ஸ்கேர்ட்'டும் பச்சை 'ஹேன்ட் பேக்'கும்தான். ச்சா! அவள் கூலிங் கிளாஸ் போட்டாலே அது ஒரு தனி ஸ்டைல்தான்டா"- என்று தாமதத்துக்கு விளக்கம் தருகிருன் கோபால்.

''பேசினுயா? படத்துக்குத்தான் போகிருளோ? போய்ப்பார்ப்போமா...?'' -கேட்டுக்கொண்டே கையை உயர்த்தி நேரத்தைப் பார்க்கிருன் நடேசன்.

''சந்தர்ப்பத்தை விடுவேனு? பஸ் வரும்மட்டும் பேசிக் கொண்டிருந்தேனே. ஏதோ துணிவாங்கப்போகிருளாம். படத்துக்குப் போகலாமெனக் கூப்பிட்டேன். மெட்னிக் கென்ருல் வந்திருப்பாள். ஸ்வீட் கேர்ல் இல்லையா?''-என்கிருன் கோபால். ஆனல்...? ஆமாம். ரமணி பஸ் ஸுக்கு நின்றதென்னவோ உண்மைதான், யாரோ ஒரு மனுஷியுடன். கோபால் போய்க் கதைத்தது, படத்துக் குக் கூப்பிட்டது எல்லாம்...ஓ! கோபால் அப்படித்தான். இவ்வளவு நேரமும் தானும் பஸ்ஸிற்காகக் காத்திருப் பவன் போல பக்கத்திலே நின்று அவளின் உடல் நெளிவுகளைக் கண்களாலேயே பிசைந்து கொண்டிருந் தான் என்பதுதான் உண்மை. அப்படியொரு 'வீக்னஸ்'. கோபால் ஒரு புடைவைக் கடைச் சிப்பந்தி. இப்படி எத்தனையோ பேரைத் தெரியும் அவனுக்கு.

காந்தனும் வருகிருன். அவனுடன் வருவது யார்? நடேசன் நன்ருக உற்றுப் பார்க்கிருன். அவர் அடுத்த வீட்டு இராமலிங்கசர்மா. சிங்கள மொழிச் சட்டத் தால் ரிடையராகிவிட்டு வீட்டோடேயே இருக்கிருர். நல்ல கல்விமான். சமஸ்கிருதத்திலும் பரிச்சயமுண்டு. சிவபக்தராதலால் அடிக்கடி கோவிலில் காணலாம். நடேசனின்தாய் சர்மாவை அவனுக்கு டியூசன் சொல் லித்தர ஏற்பாடு செய்தாள் அவரிடம் அவனுக்கு நிறைந்த ஒரு மரியாதை உண்டு. ஆனல் அவரைக் கண்டால் எங்கோ ஓடிவிடவேண்டும் போலிருக்கும். பாடம் முடிந்த கையோடு ஆத்மீகத்தைப் பற்றிப் பேசத்தொடங்கிவிடுவார். நடேசனிடம் பக்தியில்லை. அவன் கோவிலுக்குப் போவதுமில்லை எனக்கண்டு கொண்ட சர்மா ஒருநாள்:-

'ஞானம் சிவமயம், பக்தி; சைவ,
    தியானம் சிவாத்மகம்,
சைவ விரதம், சிவார்சேத்தி
    சிவயோகோ ஹி பஞ்சதா'

என்று தொடங்கி 'சிவனை வழிபடாதவன் வாழ்வில் மீண்டும் மீண்டும் உழலும் மிருகத்தைப் போன்றவன் என்று உபதேசிக்கத் தொடங்கினுர். அவர் நம் வாலி பர்கள் பரீட்சைக்குக் கணிதத்தைக் கட்டாய பாட

மாக எடுப்பதைப்போல தினமும் தியானத்திற்குக் கொஞ்சநேரத்தை ஒதுக்குவதை லக்ஷியமாக்க வேண்டும் என்பார். வாலிபர்கள் ஆற்றலுள்ளோராய் ஆக வேண்டுமானுல் சமய அறிவு வேண்டும். ஏனென்ருல் ''நம் மதமானது புத்திசாலித்தனமானதும், சந்தோசமானதுமான மக்களையல்லாமல் வீரர்களையும், துறவிகளையும் உருவாக்குகிறது'' என எல்லோரிடமும் சொல்வார். அவரின் பேச்சையே ஓர் உபத்திரவமாகக் கருதித்தான் நடேசன் ரியூசனையும் விட்டுவிட்டான். அப்படியானவரிடம் அகப்பட்டுக்கொண்டால் காந்தனுல் வேலைக்கே வரமுடியுமா என்ன?

மிகக் கஷ்டப்பட்டு சர்மாவின் தலையிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு வந்து நண்பர்களோடு சேர்ந்துகொள்கிருன் காந்தன்.

மூன்று நண்பர்களும் விபூதி இட்டுக்கொள்வார்கள். சந்தனப்பொட்டு துலங்கும் கோவிலேயும் கும்பிடுவார்கள். எல்லாம் அந்தச் சுற்ருடலில் இருப்பதற்கு 'லைசென்ஸ்' பெற்றுக்கொள்வதைப் போலத்தான்.

கோவில்-கடவுள்-தியானம் அதையெல்லாம் சிந்திக்க அவர்களுக்கு நேரமில்லை. மற்றவர்கள் பார்க்கின்ருர்களே அருவருப்பான காட்சியாயிருக்குமே யென்று தங்களின் 'திருவிளையாடல்' பற்றி நினைக்க மாட்டார்கள் 'கோவிலுக்குள்ளேயிருக்கும் கண்ணன் கோபியர்களுக்குச் செய்ததைவிடவா இதுமோசம்' என்பது அவர்களின் கட்சி.

ஒருநாள் அப்படித்தான் நடேசனும் கோபாலும் பஸ்ஸிற்காகக் காத்திருக்கிருர்கள். தூரத்தில் ஒருத்தி வருகிருள். சிவப்புப் பூக்களிட்ட இளநீலச்சேலை. அதற்கே ஏற்றதான குங்குமம் தூவியதைப்போல ஒரு ஜாக்கெட். அளவான உடல். வெட்டி எடுத்த வானத்திற்கு வைரமிழைத்து வீதியில் விட்டதைப் போல நடந்துவரும் அழகு. தமிழ்நாட்டு எழுத்தாளர் ஒருவர் 'சீதை நடப்பதே அழகு' என்று சொன்னதைப்போன்றதொரு வசீகரம். அவளைப் பார்வையால் கௌவி விழுங்கிக்கொண்டிருக்கும் கோபால் வார்த்தைகளை அள்ளி வீசுகிருன். பதிலுக்கு நடேசனும் வர்ணிக்கிருன். இருவரும் வாய்விட்டுச் சிரிக்கிருர்கள். அந்தச் சிரிப்பிலே அவர்களுக்கு ஒரு சுகம். சுகமா?

தலையிலே நிறைந்துவிட்ட பேனை உருவி இழுக்கும் போதுகூடத்தான் சுகமாக இருக்கிறது.

அந்த உருவம் அடுகில் வந்துவிட்டது. நடேசன் கூர்ந்து பார்க்கிருன். இத்தனைநேரம் அவன் மனதில் ஊர்ந்தது மரவட்டையா?

சிலிர்த்துக்கொண்டு, அந்த அட்டையைத்தூக்கி எறி கிருன். வந்தது...... தான் மிகவும் மரியாதை வைத்திருக்கும் ரீச்சர். என் நெஞ்சிலேயே ஓங்கி ஓங் கிக் குத்திக்கொண்டால் என்ன என்றதொரு ஆதங் கம்.

நண்பர்களுக்கு ஒரு புத்தகம் கிடைக்கிறது. மூவ ரும் மாறி மாறி மிகவும் அனுபவித்துப் படிக்கின் ருர்கள். இடையிடையேயுள்ள படங்களை ரஸிக்கின்ருர் கள்.

அது அப்படியொன்றும் ஆராய்ச்சிப் புத்தக மல்ல. அவர்களும் கலை, இலக்கியம், விஞ்ஞானம் என்றெல்லாம் தரம் பிரித்துப் புத்தகங்களைத் தேடிப் படிப்பவர்களுமல்ல துர்ப்பலமுள்ள மனிதர்களின் உணர்ச்சிகளை நம்பியே வயிறு வளர்க்கப் புறப்பட்டு விட்ட ஒருவன் எழுதிய புத்தகம்தான். அதற்குத் தோதாக நைந்துபோன புலன்களின் இரைக்காக என்று சில பத்திரிகைகளின் கட்டுரைகளும், செய்திக ளும் வேறு அவர்களுக்குக் கிடைக்கின்றன.

'அடடே! இப்படியும் உண்டுமா?' என ஆச்சரியப் படுகின்ருர்கள். அப்படியாஞல் எவ்வளவு சௌகரியம். வாழ்நாளில் முதல்தடவையாகப் பிரம்மாவிற்கு நன்றி செலுத்தவேண்டும் போலிருக்கிறது அவர்களுக்கு.

அவர்தானே இத்தனை விதங்களையும் சிருஷ்டித்தவர்.

அப்படி என்னதான் இருக்கிறது புத்தகத்தில். அதை, 'செக்ஸ்' கட்டுரைகளென்ருல் அதன் ஆசிரியர், கோபித்துக்கொள்வார். அது ஒரு கலாரசனை நூல்.

ஒரு பெண்ணின் வாயமைப்பிலிருந்தே அவளின் தன்மையை அறிவது எப்படி? இடை அமைப்பின் காரணம்? விரலமைப்புகளுக்கான குணங்கள் ஒரு குறிப் பிட்ட கேச அமைப்புடையவள் எப்படி நடந்து கொள்வாள். ஒருத்தியின் குரலின் தாற்பரியம் என்ன?

இப்படி எத்தனையோ அத்தனையும் செக்ஸ். இடையிடையே அஜந்தா, எல்லோரா, மாமல்லை சித்திரங்களையும் பிரசுரித்திருந்தார்கள்.

சர்மா இந்தப் புத்தகத்தைப்பார்த்தால் 'இப்படி நம் கலைப்பொக்கிஷங்களைத் துஷ்பிரயோகம் செய்பவர்களைத் தடுக்கவோ, தண்டிக்கவோ கலை, இலக்கியச் சங்கங்கள் நடவடிக்கை எடுத்தால் என்ன' என்றுதான் கட்டாயம் கேட்பார்.

இப்போதெல்லாம் நடேசனும் நண்பர்களும் பெண்களைக் கண்டுவிட்டால் ஆராய்ச்சிக் கண்களோடுதான் பார்க்கின்றார்கள்.

நடேசன் ஒருத்தியைக் காட்டிச் சொல்கிறான். 'அவளின் கால் சுண்டுவிரலைப் பார்த்தாயா... அடுத்த விரலைவிட எவ்வளவு உயர்ந்திருக்கிறது—'

'மோசமான நடத்தையுள்ளவளாயிருப்பாள்.'

'அப்படியானால் கதைத்துப் பார்ப்போமா?'

'ஓ! நூல் நல்லமாதிரிப் பயன்படுகிறது.

காண்போரிடமெல்லாம் ஒரே நோக்குத்தான். கல்லூரி, தெரு, கடை, கோயில் எங்கும் ஒரே ஆராய்ச்சிமயம்.

நடேசன் மீண்டும் மீண்டும் அந்தப் புத்தகத்தைப் படிக்கிறான். கல்லூரிப்புத்தகங்களுக்குஇடையில் வைத்துக்கொண்டு ஒற்றைகளைப் புரட்டுகிறான். அதே நேரத்தில் மாணவிகளையும் ஒவ்வொருவராக நோட்டமும் விடுகிறான்.



வீட்டிற்கு வந்தபோது சாப்பாடு தயாராயிருக்கிறது. அம்மா சாதம் எடுத்துவருகிறாள். அம்மாவைப் பார்க்கிறான். ஆமை கழுத்தை உள்ளே இழுத்துக் கொள்வதைப்போல அவனால் செய்யமுடியவில்லை. அவன் தரையில் வாழையிலைக் குருத்தைப் போட்டுக்கொண்டு இருக்கிறான். அம்மா குனிந்து பரிமாறுகிறாள். அம்மாவின் கைகள், அம்மாவின் அசைவுகள், நடேசனின் கண்கள் மின்சாரம் பாய்ந்தவைபோல வெட்டிவெட்டி இருக்கின்றன. கண்களை மூடிக்கொள்ளப் பார்க்கிறான். அவனின் இமைகள் மிகவும் திராணியற்றவை.

'என்னப்பா, அள்ளிச் சாப்பிடு'-அம்மாதான் கரண்டியை எடுத்து நிறையக் குழம்பு விடுகிறாள். அம்மாவின் குரல்!...... 'சேச்சே! அந்தப் புத்தகத்தை ஏன் தான் படித்தேன்...அம்மாவையே விஞ்ஞானகூடத்திலுள்ள ஒரு ஜந்துவைப்பார்ப்பதைப்போல பார்த்துக்கொண்டு...ஐயோ!' வாயிலிட்ட கவளம் நெஞ்சிலேயே நின்றுகொள்கிறது.

'தம்பி உடம்புக்கு என்னப்பா...?'

'ஒன்றுமில்லே, நீ உள்ளே போம்மா.'

'யாரோடாவது சண்டை பிடித்தாயா?' - கேட்டுக்கொண்டே வந்து சுகவீனமாயிருக்குமோ என்ற ஐமிச்சத்தில் நெற்றியைத்தொட்டுப் பார்க்கிறாள். அருகிலேயே நிற்கிறாள். நடேசனின் தறிகெட்டோடும் பார்வை அம்மாவின் பாதத்தை நெருங்கிவிட்டன. ஹா! அவன் முன்னாலிருந்த சாதம் ஜுவாலையாகமாறி நரம்புகளிற் பாய்கிறது. வெறித்து நிலைகுத்திப்போய் பாதங்களையே பார்க்கிறான். விரல்கள்... அதோ... அதோ...

சுண்டுவிரல்... அந்தச் சுண்டுவிரல்...

அந்தச் சுண்டுவிரல் உயர்ந்து, மற்ற விரலுக்கு மேலாகக் கிளம்பி... நடேசன் எழுந்துவிட்டான்.

சாக்கடைக் கால்வாய் வந்துகொட்டிக்கொண்டிருப்பதைப்போல தலைக்குள் இரைகிறது. இருப்புக்கொள்ளாமற் தவிக்கிறான்.

ஐயோ! அம்மா! அம்மா! அம்மா!

வீட்டைவிட்டே ஓடிவிட்டாலென்ன...

எதுவுமேசெய்யத்தோன்றவில்லையே.

எழுந்து வெளியே வருகிறான். 'கோபாலாவது, காந்தனாவது வந்தாலும்...சேச்சே! அவர்கள் வந்தாலும் இதையேதான் பேசுவார்கள்... வேண்டாம், வேண்டாம்.'

'இப்படியே நடந்துபார்க்கலாம்' என்று தெருவிலிறங்கிப் போகிறான். பக்கத்துவீட்டில் குரல் கேட்கிறது. அங்கே இராமலிங்க சர்மா நிற்கிறார். நடேசனின் கால்கள் அவரை நோக்கி நடக்கின்றன.

சர்மா அவனோடு சிரித்த முகத்தோடும், மலர்ந்த மனத்தோடும் பேசுகிறார். சர்மா சொல்வதையெல்

லாம் அவன் கேட்டுக்கொண்டிருக்கிறான். அவனும் இடையிடையே பேசிக்கொள்கிறான். அவரின் பேச்சு அவனுக்குப் புத்துணர்ச்சி தருகிறது. அவனும் மிக அமைதியாகக் கேட்டுக்கொண்டிருப்பதால் அவரும் புதிய புதிய கருத்துக்களைக்கூறுகின்றார்.

அடுத்த நாளும் சர்மாவிடமே வருகிறான்.

நடேசனின் மனம் எதற்கோ சஞ்சலப்படுவதை சர்மா புரிந்துகொள்கிறார். 'தம்பி! தருமரின் தம்பியரே! மனதாற்செய்த சிறு தவறுக்காக நரகத்தின் உபாதையை அனுபவிக்கவில்லையா என்ன...' என்கிறார் அவர்.

'சர்மா ஐயா கூறியதைப் போலத் தியானம் அமைதியைத் தருமா?'—நடேசனுக்குக் கோவிலுக்குப்போக வேண்டும்போலிருக்கிறது

கோவிலுக்குப் போகிறான். கற்பூரத்தை ஏற்றுகிறான். வணங்குகிறான்.

கோவிலுக்குள் சிவன்-பார்வதி என்ற வரிசையில் பல விக்கிரகங்கள்.

தெய்வீகச் சிலைகள்.

நடேசன் அவை ஒவ்வொன்றின் அருகிலும் சென்று கற்பூரம் ஏற்றித்தொழுகிறான்.

அடுத்த சிற்பத்தினிடம் வருகிறான். கற்பூரத்தை எடுத்து அதன் பாதங்களில் வைத்துக் கொளுத்துகிறான். ஹா!...இதென்ன...! பிரமித்துப்போய் நிற்கிறான்.

முகில் வெடித்து மின்னல் ஓடி வருகின்றதா?

அந்த விக்கிரகத்தின் சுண்டுவிரல் உயர்ந்து - அதோ மெட்டி பூண்ட அந்த விரல் மற்ற விரலைவிட மேலெழுந்து உயர்ந்து நிற்கிறது.

காதைப்பொத்தி அறை விழுந்தால் அந்த அதிர்ச்சியில் தலைக்குள்ளே பொறிபறந்து உணர்வொன்றோடி சிறிது நேரத்தில் ஒரு தெளிவுண்டாகுமே அப்படியான மாற்றம்.

நடேசன் ஓடோடி வருகிறான். அம்மாவின் பாதங்களில் விழுகிறான். அந்தச் சுண்டுவிரல்களை வருடுகிறான்.

கண்ணீர் அந்தச் சுண்டுவிரல்களைக் கழுவுகின்றன. இல்லை நடேசனின் விழிகளையோ கழுவுகின்றன.

அவன் கண்களிற் பல நூறு பெண்கள்.

அதோ ரீச்சர்.

அன்றொருநாள் ரீச்சரைக் கண்டபோது ஏற்பட்டதே- தகாததைச் செய்த அருவருப்பான உணர்வு.

அந்தப் பெண்களைமட்டும் எதுவும் சொல்லலாமா?

ரீச்சர்-அவளும் பெண்தானே! அம்மா! நீயும்பெண்ணல்லவா?—

'என்னப்பா இது...'-அம்மா புரியாமல் திகைக்கிறாள்.

'அம்மா! எங்கே அம்மா உன் சுண்டுவிரல் மெட்டி?' -விரல்களைப்பற்றிக் கொண்டே கேட்கிறான்.

'என்றைக்கோ கழற்றிவைத்துவிட்டேனே... அது எப்படியப்பா உனக்குத்தெரியும்...?'

நண்பர்கள்-அப்பட்டமான புத்தகங்கள்- எளிய பத்திரிகைகள் -அதனாலுருவாகும் சிதைகின்ற உள்ளங்கள்-அவர்களுக்கு முன்னால் கிடக்கும் நீண்ட பாதை.

கடைசித்துளிக்கண்ணீரைத் துடைக்கிறான்.

புலன்களால் நுகரமுடியாத ஒரு கபாடம் இதயத்துக்குள்ளே திறந்துகொள்கிறது.

அந்த மெட்டிகளைத் தேடியெடுத்து அம்மாவின் விரல்களில் அணிவிக்கிறான். அம்மாவின் பாதங்கள் தான் எவ்வளவு அழகாயிருக்கின்றன!

(முற்றும்)